# MEGHASANDESA

OR

## CLOUD MESSENGER

TAMIL



By

**Pandit M. Duraiswami Aiyangar**

*Ayurveda Bhushana*

Price 10 Annas

# காதம்பரீ

பண்டித மே. துரைஸ்வாமி ஐயங்காரவர்கள்

இயற்றியது.

இந்நூல் ஸ்ரீபட்டபாணனது ஸம்ஸ்கிருத காதம்பரியின் (கிரிவான சிலேஷைகளடங்கிய சில வர்ணனைகளை விலக்கி பாணனது வாக்கியங்களைக் கொண்டே வரையப்பட்ட காதம்பரீஸங்கிரஹத்தின்) தமிழ்மொழிபெயர்ப்பு. வடமொழியிலுள்ள காதம்பரியின் ஒவ்வொரு பதத்திற்கும் பொருளெழுதுவதிலும், ஒவ்வொரு வாக்கியத்தின் அபிப்பிராயத்தை உள்ளபடி விளக்குவதிலும், ஸம்ஸ்கிருதத்திலிருப்பது போலவே தமிழிலும் வாக்கியநடை வெகு அழகாகவும் கம்பீரமாகவும் அமையச்செய்வதிலும் அதிக ஊக்கமெடுத்துக் கொள்ளப்பட்டிருப்பதைக் குறித்து சுதேசமித்திரன், இந்துநேசன், ஹிந்து, மஞ்ஜுபாஷிணீ முதலிய பத்திரிகைகளும் கல்விமான்களும் விசேஷமாகப் புகழ்ந்திருக்கின்றனர். கதையின் வரலாறு மிகவும் ஆச்சரியகரமாயிருக்கும். சென்னை பிரஸிடென்ஸிகாலேஜ் தமிழ்பிரொபஸர் மஹாமஹோபாத்தியாய வே. ஸ்வாமிநாதையரவர்கள் எழுதுவதாவது:—"ம-ா-ா-ஸ்ரீ பண்டித, எம். துரைஸ்வாமி ஐயங்கார் வடமொழியிலிருந்து தமிழில் வசனநடையாக மொழிபெயர்த்திருக்கும் 'காதம்பரீ' என்னும் புத்தகத்தைப் படித்துப் பார்த்தேன். விஷயங்கள் மிகவும் திருப்திகரமாயிருக்கின்றன. வடமொழிப் பயிற்சி பெறாத தமிழர்கள் அந்தப் பாஷையிலுள்ள இந்நூற்பொருளை அறிந்து இன்புறுதற்கு இப்புத்தகம் தக்க கருவியாக இருக்குமென்று நினைக்கின்றேன்."

முதற்பாகம், இரண்டாம் பாகம், ஆக முழுப்புத்தகத்தின் விலை 1-12-0

R. K.

# MEGHASANDESA

TRANSLATED INTO TAMIL FROM

**The Famous Sanskrit Work Meghasandesa of Celebrated Sri Mahakavi Kalidasa**

---

**[With full notes & Geographical information]**

BY


**PANDIT M. DURAISWAMI AIYANGAR,**

AYURVEDA BHUSHANA

*Diplomaed Ayurvedic Medical Practitioner ; Lecturer, The Madras Ayurvedic College ; Physician, S. K. P. D. Hospital, Madras ; and Author of the Ayurvedic System of Pharmacopœia, Kadambari (in Tamil) etc., etc.*



**MADRAS.**

V. KALYANARAM IYER & CO.

1913

ஸ்ரீ

# மேகஸந்தேசம்

இஃது

டிப்ளோமா பெற்ற ஆயுர்வேத டாக்டரும்,
சென்னை ஆயுர்வேதகாலேஜில் போதகாசிரியரும்,
எஸ். கே. பி. டி. ஆஸ்பத்திரியில் டாக்டரும்,
'காதம்பரீ,' 'ஔஷதயோகவிதி' முதலிய
நூல்களியற்றியவருமான
மாடபூசி
**பண்டித மே. துரைஸ்வாமி ஐயங்கார்**
ஆயுர்வேத பூஷண
அவர்களால் இயற்றப் பெற்றது.

Kalidasa

மஹாகவி யென்று பெரும்புகழ் பெற்ற ஸ்ரீ காளிதாஸன்
வடமொழியிலியற்றிய மேகஸந்தேசத்தின்
தமிழ் மொழிபெயர்ப்பு.

சென்னை:
வி. கல்யாணராம ஐயர் அண்ட் கோ.
1913

ஸ்ரீ:

# நூன்முகம்

மேகத்தினிடம் செய்திகளைச் செப்பித் தூதனுப்புதலை முக்கியமாகப் பெற்றதால் இந் நூல் மேகஸந்தேசமென்னும் பெயரைப் பெற்றுளது ; மேகதூதமெனவும் மொழியப்படுகின்றது. வடமொழியில் அழகிய பத்தியங்களாலாகிய இந் நூல் உருவத்திற் சிறிதெனினும், வாக்கியங்களின் வனப்பிலும், பொருட்களின் பான்மையிலும், இரஸவிசேஷங்களின் இணைப்பிலும் காளிதாஸமஹாகவியின் காவியங்களுள், இஃது மிகச் சிறப்புற்று அவற்றிற்குச் சிரோமணியெனத் தகும் சீர்மையைப் பெற்றிருக்கின்றது. இதிற் பிரஸித்தி பெற்ற விரிவான கதையொன்றும் விசேஷமாய் அமைந்தில்லையாயினும், மிக மநோஹரமான விப்ரலம்பமென்னும் சிருங்காரரஸத்தையே [1]முக்கியமாகக் கொண்டு, ஆதிமுதல் அந்திமம் வரையில் அபரிமிதமாய் மனக் களிப்பூட்டுமாறு வர்ணிக்கப்படும் சிறிய விஷயமே

1. சிருங்காரரஸமானது விப்ரலம்பமென்றும், ஸம்போகமென்றும் இருவகைப்படும் ; தம்பதிகள் பிரிந்திருக்குங்கால் அவர்களது நிலைமைகளைப்பற்றி வர்ணிக்கப்படும் சிருங்காரமானது விப்ரலம்பமென்றும், ஒரிடத்திற்கூடியிருக்கையிலுள்ள நிலைமைகளைக் கூறும் சிருங்காரமானது ஸம்போகமெனவும் மொழியப்படும்.

வித்வான்களின் மனதுக்கு வியப்பூட்டும் தன்மையது; அஃது, வடமொழியில் இந்நூலியற்றிய மஹாகவியினுடைய மதியின் திறமையையும் பெருமையையும் நன்கு விளங்கச் செய்கின்றது.

ஸ்ரீவால்மீகிமாமுனிவர் ஸ்ரீமத்ராமாயணத்தை இயற்றி, முதலில் மஹாகவிகளுக்குக் காவியரசனையில் மார்க்கத்தை யுபதேசித்ததுபோல், கவிகுலதிலகனை காளிதாஸனே இத்தகைய ஸந்தேசகாவியம் வரைவதற்கும் வழிகாட்டிய முதற் புருடனுவான்; ஆதலின் முதலில், இராமாயண முதலியவற்றில் ஆங்காங்கு வர்ணிக்கப்பட்டுச் சிதறுண்டிருக்கும் ஸந்தேசமென்னும் தூதனுப்பும் விஷயமனைத்தையும் ஒருங்கே ஒழுங்காய மைத்து இங்ஙனம் ஓர் பிரபந்தமாய் இயற்றக் கூடியதான வகையைத் தேடிய புகழுக்குரியவன் இக் கவிராயனெனக் கூறவேண்டும். இதற்குப் பின் பல ஸந்தேச காவியங்கள் இதற்குப் போலியா யேற்பட்டன வென்றாலும், மேகஸந்தேசத்திற்குள்ள மனோஹரத்தன்மையும்,கவிகளுள் எவ்வகையிலும் முதன்மை பெற்ற மஹாபுருடனது முகத்திலிருந்து அனைத்திற்கும் ஆதியில் வெளி வந்ததனாலான அதன் பெருமையும் மற்றவைக் குண்டாவதெங்ஙனம்? உலகத்திற் பெரும்பான்மையோர் அவரவரது மனோபாவங்களுக்கும் நிலைமைகளுக்கும் ஏற்றவண்ணமே மற்றவரது தன்மைகளுமாகுமென்று நினைக்குமியல்பினரென்னும் விஷயத்தை

அனுபவங்களாலறிந்தவனான இக் கவியானவன், பிரிவாற்றாமையினால் பெரிதும் பரிதவிக்கும், இயக்கனது நிலைமைகளுக்கேற்றவண்ணம், மேகமேகவேண்டிய மார்க்கங்கள் முற்றிலுமுள்ள நதிமுதலியவற்றை அவ்வியக்கன் வகைவகையாய் வர்ணிப்பதாக மொழிவதானது, ப்ரியமுள்ள தம்பதிகளது பிரிவாற்றாமையின் பிரபாவத்தைப் பிரதானமாய் விளக்க முயன்ற இந் நூலுக்கு மிகவும் மேன்மையைத் தருகின்றது. இந் நூலுக்குப் பின் வந்த எந்த ஸந்தேசகாவியமும், ஒன்றிரண்டைத் தவிர, இவ்வாறாக இன்றியமையாத பல விஷயங்களில் இதற்கு இணையாகாதென்று, இந்நூலையும் இதற்குப் போலியாக வந்த மற்றவைகளையும் முற்றிலும் உற்று நோக்குபவரே உணரக் கூடும். வடமொழியில் நாடக முதலியவற்றிற்கு இருப்பதுபோல், ஸந்தேசமென்னும் காவியமியற்றுவதற்கு இலக்கண நூலேதும் இருப்பதாய் அறியப்படவில்லையாயினும், இம் மேகஸந்தேசமே முதலில் இலக்கியமாகவும், பிறகு மற்றவர் இயற்ற முயன்ற ஸந்தேசங்களுக்கு ஒருவாறு இலக்கண நூலாகவும் ஏற்பட்டதெனக் கூறவேண்டும். ஆம்; பிறகு ஸந்தேசகாவிய மியற்றியவர், மேகஸந்தேசத்திலிருப்பது போலவே மந்தாக்ராந்தா என்கிற விருத்தத்தையும், விப்ரலம்பசிருங்காரத்தையும், வர்ணனைகளின் வகைகளையும், பத்தியங்களின் எண்ணிக்கைகளையும் பெரும்பாலும் பின்பற்றியிருக்கின்றனர். ஸமீபகாலங்களில் எழுதிய சிலவற்றிற் பத்தியங்களின் எண்ணிக்கைச்

றிந்து மிருதியா யிருப்பதை ஆலோசித்தால், மேகஸந்தேசத்திற் பிற்காலங்களிற் பிறரால் எங்ஙனமோ ஆங்காங்கு இடையில் இணைக்கப்பட்ட வேறு பத்தியங்களைக் காளிதாஸனுடையதாகவே கருதி, அவ்வாறு அவரும் அதிக பத்தியங்களை வரையலாயினர் எனத் தோற்றுகின்றது. மேகஸந்தேசத்தின் சில பதிப்புகளில் ஸர்க்கம் முதலிய பிரிவுகளில்லாமலிருப்பினும், தெலுங்கு முதலியதிற் பதிப்பித்தச் சிலவற்றில் முதல் ஸர்க்கம் இரண்டாம் ஸர்க்கம் என்றும், தேவநாகரலிபியிலுள்ள வேறு சிலவற்றில் பூர்வமேகம் உத்தரமேகம் என்றும், பூர்ணஸரஸ்வதியினுடைய வியாக்கியானத்தின்படி முதல்ஆச்வாஸம் இரண்டாம் ஆச்வாஸம் எனவும் பிரிவுகள் காணப்படுகின்றன.

இக் கவிராயனுக்கு வால்மீகியின் வாக்குகளில்அளவற்ற ஆதராதிசயமுண்டென்பது அகில வித்வான்களும் அறிந்த விஷயமாதலாலும், மஹாபுருடரது மேன்மை பொருந்திய வரலாற்றை மனத்திற் கொண்டேனும் மற்றோர் கதையை வரைவது விசேஷமென இவன் கருதியிருக்கக் கூடுமாகையாலும், இராமாயணத்தில் ஸ்ரீசக்கிரவர்த்தித்திருமகன் ஸீதாபிராட்டியினிடம் ஆஞ்ஜனேயரைத் தூதனுப்பிய வரலாற்றைக் கருத்தில் வைத்தவனாய், இவன் இம் மேகஸந்தேசத்தை இயற்றியிருக்க வேண்டுமென்பதற்கு ஸ்ரீமான் பண்டித ஆர். வி. கிருஷ்ணமாசாரியர் எடுத்துரைக்கும் ஆதாரங்களை

ஆதரவுடன் ஏற்காதவருமுளரோ ? அவை எவை யெனில்:—

இந் நூலின் துவக்கத்திலேயே, தனதருமைக் காதலியை விட்டுப் பிரிந்த யக்ஷனை ஓராளொருவன் எனக் குறிப்பதால், மனத்தினால் ஆலோசிக்க முடியாத மஹிமை பொருந்திய மஹாபுருடனொருவனை இந் நூலுக்கு நாயகனாக நிச்சயிக்கின்றானெனவே நினைக்க வேண்டும். 'ஜானகி நீராடி மிகவும் புனிதமான நீர்களைப் பெற்ற...' எனவும், 'இராமகிரியின் ஆச்ரமங்களின் கண்...' எனவும், 'ஸ்ரீராமனது திருவடிகளின் சின்னங்களைப் பெற்ற... 'என்றும், 'இராவணனது புயங்களால் ஆட்டங்கொண்ட அடிவாரத்தின் ஸந்தியந்தங்களை யுடையது...' எனவும், 'இங்ஙனமுரைத்ததும் ஸீதையானவள் ஹநுமானைப் பார்த்தது போல்...' எனவும் இவ்வாறு பல விடங்களிற் பிரயோகிப்பதை நோக்குங்கால், இக்கவி இராமாயணகதையைக் கருத்திற் கொண்டு மேகஸந்தேசத்தை இயற்றினானெனக் கூறுதல் பொருந்தும். அல்லாமலும், இராமாயணத்தில் ஹநுமானுக்கு உபமானமாகக் கூறிய குஞ்ஜரம் குன்றத்தின் சிகரம் முதலியவற்றை இங்கு மேகத்திற்கும் உபமானமா யுரைப்பது, இஷ்டம் வாய்ந்தவிதம் உருவமெடுக்கவல்ல வல்லமை ஹநுமானுக்கிருந்தது போல் மேகத்திற்கும் உண்டென வர்ணிப்பது, ஸுக்கிரீவன்வானரர்களுக்கு வழிகளை யுபதேசித்ததற்கேற்ப

இங்கு யக்ஷனும் மேகத்திற்கு மார்க்கங்களை மொழிந்திடுவது, ஸுவேலபர்வதத்தின்மீது இலங்கையைப் போல் கைலைமலையினுச்சியில் அளகாபுரி அமைந்திருப்பதாகக் கூறுவது, இலங்கையினுள் மாலைநேரத்தில் ஆஞ்ஜனேயரைப் போல் அம்புதமும் அந்திப்பொழுதில் அளகையினுள் பிரவேசிக்குமாறுரைப்பது, இரவில் ஸீதையினிடம் ஹநுமான் சரீரத்தை மிகச் சிறிதாக்கிக் கொண்டு இராமனது செய்திகளைச் செப்புவதற்குச் சென்றது போல் மேகமும் உடலையொடுக்கிக் கொண்டு அவ்விதம் செய்யும் வண்ணம் அதற்கு வகை கூறுவது, அசோகவனத்திற் கேட்பாரின்றி வஸித்த ஸீதையின் வெகு தீனமான நிலைமையைக் குறித்து வால்மீகிமுனிவர் வர்ணிக்கும் விதங்களைப் பல வகையிலும் பின்பற்றி இங்கு யக்ஷனது மனைவியின் நிலைமையை மனமிரங்குமாறு வர்ணிப்பது, இன்னும் இவை போன்ற பல விஷயங்கள் இராமாயணத்திலுள்ள ஹநுமத்ஸந்தேசத்தை மனத்திற் கொண்டே மேகஸந்தேசத்தை இக்கவி இயற்றினனென்பதற்கு வெளிப்படையான ஆதாரங்களாகின்றன.

இதற்குப் பின் இதை அனுஸரித்து ஏற்பட்ட ஸந்தேசகாவியங்களுள், கவிதார்க்கிகஸிம்ஹமென்றும், ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரரென்றும் பிரஸித்தி பெற்ற ஸ்ரீமந்நிகமாந்ததேசிகர் அருளிச் செய்த ஹம்ஸஸந்தேசமே மிக முக்கியமானது. பத்தியங்களின் எண்

ணிக்கையிலும், ஆச்வாஸமென்கிற பிரிவுகளின் இணைப்பிலும், வாக்கியங்களின் நடையிலும், கருத்துகளின் கோட்பாடுகளிலும் ஹம்ஸஸந்தேசமே மேகஸந்தேசத்திற்கு மிகவும் ஏற்றதா யிருக்கின்றது. அல்லாமலும், ஹம்ஸஸந்தேசம் சில விஷயத்தில் அல்லது சிலவிடங்களில் மேன்மையினால் மேகஸந்தேசத்தையே மீறியதெனக் கருத வேண்டி யிருக்கின்றது. அஃதெங்ஙனமெனில், ஹம்ஸஸந்தேசத்தில் ஸ்ரீராமனையும் ஸீதையையும் நேராகவே நாயக நாயிகைகளாகவும், எவ்விதத்திலும் பக்ஷிகளுக்குள் பெருமை பெற்றதாகக் கூறப்படும் இராஜஹம்ஸத்தைத் தூதனாகவும் அமைத்து, 'மானிடத்தன்மையை மேலாக மதித்து, ஸர்வோத்தமமான ஸூரியவம்சத்தில் ஆவிர்ப்பவித்த லக்ஷ்மீபதியான ஸாக்ஷாத் ஸர்வேச்வரன்...' [1]என்று கதாநாயகனுக்குக் குலகோத்திரங்களாலும் தைவங்களுக்கெல்லாம் தைவமாயிருக்குந் தன்மையினாலுமுண்டான வளப்பங்களையும் விளக்கி, கம்பீரமாய் அழகிய தோரணியிற் காவியமியற்றிய ஸ்ரீவேதாந்ததேசிகர், தேவர்களிற் கீழான ஜாதியைச் சேர்ந்த ஒரு யக்ஷனை நாயகனாகவும், தூமம்போல் பிடிக்கடங்காமல் நொடிப்பொழுதிற் பார்த்துக்கொண்டிருக்கையிலேயே பலவாறு சிதறி யுருமாறிப் போகுமியல்புடையதும், ஆகவே அசேதனத்திலும் அசேதனமுமான மேகத்தைத்

1 'வம்சே ஜாதஸ் ஸவிதுரநகே மாநயந் மாநுஷத்வம் தேவ: ஸ்ரீமாந்...' ஹம்ஸஸந்தேசம், முதற்பத்தியம்.

தூதனுகவும் அமைத்து, அதிலும் கதாநாயகனை 'ஒரு யக்ஷன்' என்று குலம் பெயர் ஏதுமில்லாத அப்ர ஸித்தனுகக் கூறும் காளிதாஸனை இங்கு மீறி விட்டன ரென்றுரைப்பது மிதமிஞ்சிய மொழியாகாதன்ருே? மேலும் மேகஸந்தேசத்தில் மேகத்திற்குக் கூறிய மார்க்கங்களிலுள்ளப் பிரதேசங்கள் கவியினுல் வெகு அழகாக வர்ணிக்கப் பெற்றிருக்கின்றனவென்ருலும், அவற்றுள் திவ்யக்ஷேத்திரங்கள் வெகு சிறுபான்மை யன; ஹம்ஸஸந்தேசத்தில் தூதனை இராஜஹம்ஸத் திற்கு உபதேசிக்கப்படும் வழிகளிலுள்ளப் பிரதேசங் களோ, சிருங்காரரஸத்திற்கேற்றவண்ணம் மிகவும் மனுேஹரமாய் வர்ணிக்கப்படுவதுடன், முற்றிலும் சாந்திரஸத்தைக் கைப்பற்றியவராலும் உவக்கக்கூடிய திவ்யக்ஷேத்திரங்களாகவும் இருக்கின்றனவாதலின், இஃது, பொன்மலருக்கு நறுமண மேற்றியதாகுமல்ல வா? மேகஸந்தேசத்தையும் ஹம்ஸஸந்தேசத்தையும் ஆதியோடந்தமாய் ஊக்கத்துடன் உற்று நோக்குங் கால், ஸ்ரீவேதாந்ததேசிகர், தாம் இயற்றிய ஸந்தேச காவியத்திற்கு மேகஸந்தேசத்தையே வழிகாட்டியா கக் கருதினுராயினும், பற்பல விடங்களிற் காளிதாஸ னது கருத்துகளையே வெகு நுட்பமாய் அழகாகப் பின்பற்றினுரெனினும், சில் விஷயங்களிற் காளிதா ஸன் சென்ற வழிகளை மிக நன்ருகச் சீர்திருத்தி அல் லது மாற்றி, இரஸவிசேஷத்தையும் இனிதிலும் இனி தாய் இணைத்து, தமது நூலை மேகஸந்தேசத்தினுங்

மேன்மை பொருந்தியதாகச் செய்தனரென்று பக்ஷபாதமில்லாமற் பார்க்கும் பண்டிதருக்கு நன்கு விளங்கும். ஆகையால், இங்ஙனம் ஸந்தேசகாவியமொன்றை ஸரஸமாய் முதன்முத லியற்றியதாலுண்டான பெருமைக்கு ஸ்ரீகாளிதாஸனும், பின்னர் சீர்திருத்தங்களுடன் ஸகல குணங்களு மமைந்த வழியில் ஸந்தேசகாவியம் வரைந்த புகழுக்கு ஸ்ரீகவிதார்க்கிகஸிம்ஹமும் உரியவராவரென்றுரைப்பது உற்றதாகும். இவ்விதமாய் இவ்விரு நூல்களுக்கும் ஆங்காங்குள்ள ஒற்றுமைகளையும் விசேஷ குணபேதங்களையும் இங்கு மொழிபெயர்த்தெழுதுவதென்றால் விஷயம் மிக விரிவடைவதுடன், அவ்வித ஆராய்ச்சி வடமொழியறியாத தமிழருக்கு அவ்வளவு அவசியமெனத் தோற்றவில்லையாதலால், அவற்றை யான் இங்கு வரைய விரும்புகிறேனில்லை.

வேறு ஸந்தேசகாவியங்கள் எவையெனில்:— உத்தண்டசாஸ்திரி இயற்றிய கோகிலஸந்தேசம், இலக்ஷ்மீதாஸன் செய்த சுகஸந்தேசம், ஸ்ரீரூபகோஸ்வாமியின் ஹம்ஸதூதம், கிருஷ்ணஸார்வபௌமனது பதாங்கதூதம், வெகு ஸமீபகாலத்தில் தைலங்கவ்ரஜநாதன் இயற்றிய மனோதூதம் முதலியவை; இவற்றுள் சில புலவரது கண்களுக்கும் புலப்படாமற் பதுங்கிக் கிடக்கின்றன; அன்றியும், அவற்றின் அருமையும் அவ்வாறெனவே அறியப்படுகின்றது. உத்தவஸந்தேசம் முதலிய மற்றும் சில ஸந்தேசங்களின் பெயரைச்

செவியுற்றிருப்பவரும் அரிதெனக் கருதுகின்றேன். தோயீகன் என்கிற கவியினால் இயற்றப் பெற்ற ப்ரவனதூதமென்கிற ஸந்தேசகாவியமொன்று மிகப் பண்டைக் காலத்ததென்று எண்ணப்படுகிறது.[1] வாதிசந்திரன் என்பவனியற்றிய ப்ரவனதூதம் மற்றொன்றுண்டு.[2] விக்ரமகவி யென்பவன் அர்ஹந்நேமிநாதனைப் பற்றி நேமிதூதம் என்று ஸந்தேசமொன்று வரைந்திருக்கின்றான். இந்த விக்ரமகவி, மேகஸந்தேசத்திலிருந்து ஒவ்வொரு பத்தியத்தினுடையவும் நான்காவது அடியைத் தனது நூலில் ஒவ்வொரு பத்தியத்திற்கும் முறையே நான்காவது பாதமாக அழகாய் அமைத்திருக்கின்றான். இங்ஙனமே ஜிநஸேநாசாரியன் என்பவன், மேகஸந்தேசபத்தியங்களிலிருந்து ஒன்று அல்லது இரண்டு பாதங்களைப் பெயர்த்தெடுத்து, பார்ச்வாப்யுதயம் என்கிற தனது நூலில் ஒவ்வொரு பத்தியத்திலும் இணைத்து, மேகஸந்தேசம் அனைத்தையும் அதில் அடக்கியிருக்கின்றான். இவ்வாறு இவ்விருவரும் காளிதாஸனது காவியத்திலுள்ள பத்தியங்களின் சில பகுதிகளைக் கொண்டு தமது நூல்களை

1. தோயீகனது ப்ரவனதூதம், வங்காள ஏஷியாடிக் ஸொஸைடியாருடைய மாதாந்தரஸஞ்சிகையின் புதிய தொகுதியில் மனமோஹனசக்ரவர்த்தி என்பவரால் வெளியிடப்பெற்றது. அத்தொகுதியில் முதல் வால்யத்தில் 41 முதல் 71 வது பக்கம் வரையில் உள்ளது.

2. பம்பாய் நிர்ணயஸாகரபிரஸ்ஸிலிருந்து வெளியான காவியமாலாவில் 13 வது தொகுதியில் வெளியாயிருக்கின்றது.

முடித்துத் தமக்கும் தமது நூல்களுக்கும் சிறப்பேற்றியதாகக் கருதினர் போலும்.

இரஸப் பெருக்கிற் பெரிதும் உருவத்திற் சிறிதுமான இம் மேகஸந்தேசத்திற்கு மல்லிநாதன், வல்லபதேவன், பூர்ணஸரஸ்வதீ, கல்யாணமல்லன், ஸநாதநகோஸ்வாமீ, இராமநாததர்க்காலங்காரன், ஹரகோவிந்தவாசஸ்பதி முதலியவர்களால் பற்பல உரைகளும் வரையப்பெற்றுள்ளன. இவற்றுள் மல்லிநாதமஹோபாத்தியாயனுடைய வியாக்கியானம் உலகில் எங்கும் வியாபித்திருப்பதுடன், வியாக்கியானம் வரைவதில் வியாபகனெனன்று அவன் பெரும் பெயரையும் பெற்றிருக்கின்றான். மல்லிநாதனது வியாக்கியானத்திற்கும் மற்றவரியற்றியவைக்குமுண்டான வேற்றுமை அல்லது ஒற்றுமையை உற்று நோக்கவும் மனமொப்பாத நமது பண்டிதரிற் பெரும்பான்மையோருக்கும் மல்லிநாதனிடம் மஹத்தான குருபக்தியைப் போன்ற விச்வாஸமொன்றுண்டு. அவ்வித நம்பிக்கையைத் தடுப்பதற்கு என்றனுல் அல்லது எவராலும் ஆகாதென்று நன்கறிவேனுயினும், பூர்ணஸரஸ்வதீ முதலிய வேறு சிலரது வியாக்கியானங்கள், யான் அறிந்த மட்டும், விரிவான விசேஷ விசாரணைகளைச் செய்வதாலும், இக்காலத்தியவரும் முற்காலத்தியவருமான வித்வான்களால் விருப்புடன் எவ்வகையிலும் ஏற்கக் கூடிய விதமாய் அழகாய் அமைந்திருப்பதாலும், மல்லிநாதனது சில குறுகிய வழிகளை மீறி அவை மிக மேன்மை

யுற்றிருப்பதாகவே மொழியத் துணிகின்றேன். இந் நூலுக்கு வல்லபதேவன் வரைந்த வியாக்கியானமே, வீணாக விரிவான விஷயங்களைக் கூறாமல் வேண்டிய வளவு சுருக்கமாய் விமர்சம் செய்வதுடன், மேகஸந்தேசத்தின் வியாக்கியானங்களெல்லாவற்றிற்கும் காலத்திலும் மிக முந்தினதெனத் தெரிய வருகின்றது.[1]

காளிதாஸன் சிருங்காரரஸத்தை வர்ணிப்பதில் மிகவும் விருப்பமுள்ளவனெனவும், அதிலும் விப்ரலம்பசிருங்காரவர்ணனையில் மஹாநிபுணனென்றும் புகழ் பெற்றதற்கு இம் மேகஸந்தேசமே முதற்காரணமென மொழிய வேண்டும். விக்ரமோர்வசீயம், சாகுந்தளம் முதலியவற்றில் இக் கவி விப்ரலம்பசிருங்காரத்தை வர்ணித்தபோதிலும் அவற்றில் ஏதோ சில பாகத்தில் மட்டுமே விப்ரலம்பசிருங்காரம் அமைந்திருக்கின்றன வாதலின், அவை, ஆதியோடந்தமாய் வித்வான்களை வியப்புறச் செய்யுமாறு விப்ரலம்பத்தை விசேஷமாய்ப் பெற்ற இந்நூலுக்கு இணையாகாவென்றால், அது மிகைபடக் கூறதலெனத் தகாது. நாயக நாயிகைகள் ஓரிடத்தில் எதிரிலிருந்து இன்பமனுபவிக்கும் வகைகளை வர்ணிப்பதாலுண்டாகும் இரஸமானது, அவர்

1. வல்லபதேவனுடைய வியாக்கியானத்துடன் கூடிய மேகஸந்தேசம் தேவநாகரலிபியில், மிஸ்டர் இ. ஹூல்ஷ் ( E. Hultzsch) என்பவரால் பரிசோதிக்கப் பெற்று, இலண்டன் நகரத்தில் இராயல் ஏஷியாடிக் ஸொஸைடியாரால் வெளியிடப்பட்டிருக்கிறது.

களுக்குப் பிரிவினல் ஏற்படும் பற்பல ஆவல்களுக்கேற்ற மனப்போக்குகளின் மாதிரிகளை மொழிவதாலுண்டாகும் இரஸவிசேஷத்துடன் இணையாவிடின் பெரும்பாலும் பூர்த்திபெருதென்பது இரஸிகரெனப் பெயர் பெற்ற பண்டிதரின் கொள்கை. இக் கொள்கையைக் கைப்பற்றிய கவிகளுள் காளிதாஸனே முக்கியமாக இந்நூலைக்கொண்டு முன் சென்றவனுகிருன்.

இந்நூல் இரஸமயமாயிருப்பினும், இஃது கேவலம் சிருங்காரரஸத்திற்கே ஆதாரமாயிருப்பதைக் கருதி, சிலர் இதைப் புறக்கணிக்கக் கூடும். ஆனல் உண்மையில் இது அவ்விதமானதல்ல; ஆம்; ஸாத்விககுண மேலிட்ட வித்வான்களுக்கே பெரிதும் இன்பமளிக்கவல்ல ஸ்ரீராமன் முதலியவரது விஷயமாய் இந்நூலை யியற்றினல், மற்ற ஸாமானிய லௌகிகருக்கு இதைப் படிக்க விசேஷ விருப்பமுண்டாகாதெனக் கருதி, வெகு நிபுணனை இக் கவி, ஒருவனும் கூருத புதிய விஷயத்தைக் கொண்டு நூலியற்றுபவன் போல், எவரோ யக்ஷ தம்பதிகளையும் மேகத்தையும் சேர்த்து ஒருவாறு கதையின் வரலாற்றை வெளிப்படையாக இணைத்து, இதன் மூலமாய் லௌகிகரான இரஸிகருக்கு இதிற் பிரவிருத்தியை யுண்டாக்கி, முற்கூறியவண்ணம் ஸ்ரீசக்கிரவர்த்தித்திருமகன் ஆஞ்ஜனேயரை அசோகவனத்தில் அருந்துயரனுபவிக்கும் ஸீதாபிராட்டியினிடம் தூதனுப்பும் விஷயத்தை உள்ளடக்கி, இராமாயணத்திலுள்ள சில இன்றியமையா வர்ணனைகளை இடையில் ஆங்காங்கு

உட்புகுந்து ஊக்கத்துடன் நோக்குபவர் இன்புறுமாறு இணைத்து, இதனால் வியங்க்யார்த்தமெனப்படும் அகப் பொருளிலேயே அளவற்ற ஆவலைப் பெற்ற மஹாவித் வான்களான மேன்மக்களுக்கும் இந்நூல் விஷயத்தில் அதிக ஆசையைப் புகட்டியிருப்பதால், இந்நூல் ஸாத் விகஜனங்களால் ஆதரிக்கத்தகாததெனக் கூறுதல் ஆதாரமற்றமொழியாம். மேலும் மதியிற்சிறந்த இக் கவி யானவன் ஸ்ரீமந்நாராயணனது திவ்யாவதாரமான ஸ்ரீராமன் வஸித்த இராமகிரியிலுள்ள ஆச்ரமங்களை ஆதியிலும், ஸ்ரீ சிவபெருமான் பிரத்தியக்ஷமாய் வஸி ப்பதால் சிறப்புற்ற கைலாஸபர்வதத்தின்மீதுள்ள அளகாபுரியை இறுதியிலும் இசைத்து, சைவ வைஷ் ணவ வேற்றுமையைத் தான் அங்கீகரிக்காதவனென அறிவித்து, ஆகவே மற்றவரும் இங்ஙனம் மதவேற் றுமை மனவேற்றுமை யேதுமின்றி இந்நூலை அன் புடன் ஏற்கவேண்டுமெனக் கருதினன் போலும். அன்றியும், யக்ஷனும் அவனது மனைவியும் ஒரு வருட மளவும் ஒருவரை யொருவர் விட்டுப் பிரிந்திருக்க வேண்டி நேர்ந்ததையும், பிரிவாற்றுமை யென்பதை என்றுமுணராது நேசப்பான்மை யென்னும் பாசத் தினுற் கட்டுண்ட அவ்விருவரும் அக்காலை மிகத் துயர முற்றுத் தவிப்பதையும், அவ்வளவு நீண்டகாலத்திலும் இயக்கன் ஏகபத்நீவிரதத்தையும் அவனது மனைவி பதிவிரதாதர்மத்தையும் தவறுமலனுட்டிக்கும் வகை களையும் விரித்துக் கூறுவதான இந்நூல், சிருங்கார

ரஸத்திற்கேயல்ல, உத்தமரான ஸ்திரீபுருடர்கள் அன்னியோன்னியமாய் அன்புடனும் ஆதரவுடனும் தர்மசிந்தையுடனும் வாழ்வதற்கேற்ற வழிகளை விளக்குவதற்கும் இன்றியமையாததெனக் கூறவேண்டும்.

இக் கவியானவன், இராமகிரிமுதல் அளகாபுரி யீறாக யக்ஷன் மேகத்திற்கு மொழிந்திடும் பாவனையாய் வழிகளையும், வழிகளிலுள்ள நாடு நதி காடு மலை முதலியவற்றையும் தெளிவாக வர்ணிப்பதை நோக்குங்கால், இக்காலத்தில் தமக்கு அருகிற் சுற்றிலுமுள்ள பிரதேசங்களைப்பற்றிய அறிவும் அவற்றை அறிவதில் ஆசையும் அற்றிருக்கும் பாமரரெனத் தகும் சில பண்டிதரைப் போலில்லாமல், நெடுந்தூரத்திலுள்ள தேயங்களுக்குப் போக்கு வரத்துகளுக்கேற்ற செளகரியமேதுமற்ற அப் பண்டைக்காலத்திலும், இவன் பற்பல தேயங்களைப் பற்றிய அறிவை மிகுதியாகப் பெற்றிருந்தானென நன்கு விளங்குகின்றது. இவனது இரகுவம்சத்தில் இரகுமஹாராஜனது யுத்தயாத்திரை முதலியவற்றின் வர்ணனைகளைப் படிக்குங்கால், இராமகிரி முதல் கைலைமலைவரையிலுமேயல்ல, இப் பரதகண்டமனைத்தும் இவனுக்கு உள்ளங்கை நெல்லிக்கனி போலிருந்ததெனத் தெரியவருகின்றது.

தூதனுப்பும் விஷயத்தையே முக்கியமாகப் பெற்ற ஸந்தேசகாவியமென்பது தமிழில் தனிப்பட இல்லாதிருப்பதை அறிந்தும், பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன் மஹாகவிகளுள் முதன்மை பெற்று விளங்

கிய காளிதாஸன் வடமொழியிலியற்றிய சொற்சுவை பொருட்சுவை நிரம்பிய இவ்வித அரிய நூல்களைக் கொண்டு அக் கவிராயனது அல்லது அக் காலத்திய கவிகளது மிக மனோஹரமான மனப்போக்குகளாகும் அருஞ்சுவை பொருந்திய அமுதத்தைத் தமிழ்ரும் அருந்தி ஆனந்தமனுபவிக்கவேண்டுமென்று ஆலோசித்தும், மேகஸந்தேசமே காலத்தினாலும் இரஸத்தினாலும் மற்றும் பல குணங்களாலும் ஸந்தேசகாவியங்களுள் முதலிலெண்ணக் கூடியதாயிருப்பதைக் கருதியும் அந்நூலை இங்ஙனம் தமிழில் மொழி பெயர்க்க முயன்றேன். மேகஸந்தேசம் பல குணங்களால் மேம்பாடுற்றிருப்பதை யறிந்தே, இதைப் பன் முறையும் படித்தறிந்த புலவர்கள் இவ்வாறு வேறு பல ஸந்தேசங்களியற்றியும், இந்நூலிலுள்ள பத்தியங்களிலிருந்து ஒன்றிரண்டு அடிகளை யெடுத்துத் தாமியற்றிய ஸந்தேசங்களிலுள்ள பத்தியங்களிற் கிரமமாய் இணைத்தும், இதற்கு வெவ்வேறு வியாக்கியானங்களை வரைந்தும், ஆங்கிலம் ஜெர்மன் திபேத் முதலிய தேச பாஷைகளில் மொழிபெயர்த்தும், தம்மைப் பெருமை படுத்திக் கொண்டதுடன், இவ்வரிய நூலினிடமுள்ள அளவிறந்த அபிமானத்தையும் அறிவித்திருக்கின்றனர். டாக்டர் எச். எச். வில்ஸன் துரையவர்கள், 1813 ஆம் ஆண்டில், மேகஸந்தேசத்தை ஆங்கிலத்திற் செய்யுட்களாகவே மொழிபெயர்த்து வெளியிட்டிருக்கின்றார். இவர் அப்பொழுது வங்காளத்தில்

ஈஸ்டு இந்தியா கம்பெனியில் வைத்தியராய் (Assistant surgeon) இருந்தார். இவரது ஆங்கில மொழி பெயர்ப்புடன் கூடிய மேகஸந்தேசமானது, அப்பொழுது இந்தியாவுக்குக் கவர்னர்ஜெனரலாயிருந்த ரைட் ஆனரபுல் மிண்டோதுரையவர்களால் நன்கு ஆதரிக்கப் பெற்று, அவருக்கு அஃது அர்ப்பணமும் (Dedication) செய்யப்பட்டிருக்கின்றதெனின்,மேகஸந்தேசத்தின் அருமை பெருமைகளை என்னென்று கூறலாம்! வில்ஸன் துரையின் ஆங்கில மொழிபெயர்ப்புடன் கூடிய மேகஸந்தேசத்திலுள்ள பாடங்கள் பெரும்பாலும் நேமிதூதத்தின் முறையைப் பின் பற்றியவையாய், பத்தியங்களின் எண்ணிக்கையும் அதையே அனுஸரித்திருக்கின்றது. இப் புத்தகம் வெளியாய் நூறு வருடங்கள் ஆயின; இவ்வளவு புராதனமான பதிப்பு முற்கூறியவிதம் சில கௌரவங்களைப் பெற்றிருந்தும், பல காரணங்களால் காளிதாஸனுடையதல்லவென்று அறியப்படும் பத்தியங்களும் வெவ்வேறு பாடங்களும் பலவாறு முறை கேடாக இதிற் சேர்க்கப்பட்டு அவ்விதமே மொழிபெயர்க்கப் பட்டுமிருப்பதானது, எனது எண்ணப்படி, அப்பொழுது அவர்களால் நன்கு ஆராய்ச்சி செய்யப்படாத குறையை அறிவிக்கின்றது. இத் தமிழ்மொழிபெயர்ப்பில், காளிதாஸனுடையதென் நன்கறியப்படும் பத்தியங்களும் பாடங்களுமே ஏற்றுக்கொள்ளப்பெற்றன; மல்லிநாதனது பாடங்களையே பெரும்பாலும் பின்பற்றினேனாயினும், காளிதாஸனியற்றியதாகக் கருதப்படாத பத்தியங்களை அவ்வரிசையிலிருந்து விலக்கி,

அவற்றின் மொழிபெயர்ப்பை இப்புத்தகத்தின் இறுதியில் ஓர் அனுபந்தமாக இணைத்திருக்கின்றேன். காளிதாஸனுக்குப் பற்றுதலில்லாத பத்தியங்களை விலக்கி வியாக்கியானம் வரைந்தவர் வல்லபதேவனும் பூர்ணஸரஸ்வதியுமே; ஆனால், இரண்டாம் ஆச்வாஸத்தில் ஆறாவது பத்தியத்திற்குப் பிறகு 'கத்யுத்கம்பாத்...' என்கிற அதிக பத்தியமொன்று காளிதாஸனுடையதென வல்லபன் கருதுகிறான். ஆகையால், மேகஸந்தேசம் வல்லபதேவனது எண்ணப்படி 111 பத்தியங்களடங்கியதாகும். ஆயினும் 640 வருடங்களுக்கு முன் ஸ்ரீமந்நிகமாந்ததேசிகர், எவ்வகையிலும் மேகஸந்தேசத்திற் கேற்றதாயிருக்க வேண்டுமென விரும்பி அருளிச் செய்த ஹம்ஸஸந்தேசத்தில் 110 பத்தியங்களே இருப்பதாலும், ஆச்வாஸமென்னும் பெயரால் அதில் இருவகைப் பிரிவுகள் ஏற்படுத்தப்பெற்றிருக்கின்றமையாலும், ஒவ்வோர் ஆச்வாஸத்திலும் ஆரம்பமுதல் இறுதிவரையில் வர்ணனையின் வழிகளும் வாக்கியதோரணிகளும் இரஸவிசேஷங்களின் இணைப்பும் பெரும்பாலும் ஒரே விதமாயிருப்பது வெளிப்படையாய் அறியப்படுவதாலும், மேகஸந்தேசத்திலுங்கூட பத்தியங்களின் எண்ணிக்கையும் ஆச்வாஸபேதங்களும் அங்ஙனமே அமைந்திருக்க வேண்டுமென யான் தீர்மானித்து, அதற்கேற்ப இம்மொழிபெயர்ப்பிலும் பத்தியங்களின் எண்ணிக்கையையும், ஆச்வாஸங்கள் என்று இரு பிரிவுகளையும் ஏற்படுத்தலானேன். காதம்பரீ முதலியவைதைப் போன்ற வடமொழியிலுள்ள வசனகாவியங்களைத் தமிழில் அவ்

விதமே மொழிபெயர்ப்பது மிகக் கடினமென்று எண்ணியிருந்தும், யான் முதலில் ஒருவாறு அங்ஙனம் செய்ய முயன்றதில், இரஸிகரான கல்விமான்கள் பலர் அதை மனமுவந்து மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொண்டதைக் கண்டு, வசனகாவியமல்லாமலும் விசேஷமான கதையின் வரலாற்றைப் பெறாமலும், கேவலம் இரஸமயமாயமைந்திருக்கும் இத்தகைய பத்தியகாவியத்தைச் சிறிதும் சுவை குன்றாது அழகிய தமிழ்வசன நடையில் மொழி பெயர்த்தலுங் கூடுமென நிச்சயித்து இங்ஙனம் முயன்றேன். உலகவிவஹாரங்களைச் சிறிதுமுணராமலும், இரஸப்போக்குகளின் வகைகளையறிய வல்லமையைப் பெறாமலுமிருக்கும் இளம்பிள்ளைகளுக்கு ஸம்ஸ்கிருதபாஷையைக் கற்பிக்கையில், இரஸிகரான வித்வான்களது மனதுக்கே மிகவும் இன்பமளிக்கக் கூடிய மேகஸந்தேசம் போன்ற காவிய முதலியவற்றை, அநாகரிகரால் அறிஞரெனக் கருதப்படும் சில அரஸிகசிரோமணிகள் அப்பிள்ளைகளுக்கு முதன் முதலிற் கற்பிக்கமுயன்று, பத்தியங்களைப் பதம் பதமாகப் பகுத்து, அரும்பொருளை அறுதரித்து, எளிதான அழகிய வழிகளால் அறிந்து அனுபவிக்கக் கூடிய இனிய விஷயங்களை வீணிற் கசக்கி விரஸமாகச் செய்து, மேன்மை பொருந்திய நூலுக்கு இழிவு உண்டாக்குவதை நோக்கி, யான் பூனம் ஸஹியாமல், மேகஸந்தேச பத்தியங்களிலடங்கிய பதங்களின் பொருட்களையும் கருத்துகளையும் ஒருமிக்க அந்நூலிலுள்ளவாறே இரஸப்பெருக்கெனும் அமுதத்தில் ஆழ்த்தி அவ்விதமே ஸம்ஸ்கிருதமாணாக்கருக்கு மாசற்றவழி

யில் அறிவிக்க வேண்டுமென விரும்பியும் இந்நூலைத் தமிழில் இவ்வண்ணம் எழுதலானேன். அவசியமான அனேக விடங்களிற் பதங்களின் பொருட்கள் வாக்கியங்களின் கருத்துகள் முதலியவற்றை வெளியிடுவதில் வடமொழியில் வியாக்கியான மியற்றியவர் வரைந்துள்ள அபிப்பிராயபேதங்களை விளக்குவதன் பொருட்டும், ஆங்காங்கு வாக்கியங்களிலடங்கியுள்ள விசேஷமான உட்கருத்துகளை உணர்த்துவதற்காகவும், இதிஹாஸங்களெனப்படும் சில கிளைக் கதைகளையும் மற்றும் பல விஷயங்களையும் நன்கு அறிவிப்பதற்கென்றும் அந்தந்த பக்கத்தில் ஓர் உரையையும் வரைந்து இணைத்திருக்கின்றேன். அனேக நூற்றாண்டுகளுக்கு முன்பிருந்த காளிதாஸனால் இந் நூலில் கூறப்பட்டிருக்கும் இராமகிரிமுதல் அளகைவரையிலுமுள்ள பிரதேசங்களின் பெயர்கள் அல்லது உருவங்கள் இப்பொழுது பலவாறாய் மாறுபாடடைந்திருப்பதைக் கருதி, இக்காலத்தில் வழங்கப்படும் விதமாக அவற்றின் விவரங்களைத் தெளிவாகக் கூடுமாறு விளக்கி, இந்நூலின் இறுதியில் அவற்றின் விஷயமும் மற்றோர் அனுபந்தமாகச் சேர்க்கப்பட்டுளது. ஆதலின், ஸம்ஸ்கிருதம் கற்றவருக்கும் ஸம்ஸ்கிருதமறியாத் தமிழருக்கும் இந் நூல் இனிப்பூட்டுமெனக் கருதுகின்றேன்; எனினும், மிக நன்றாகப் பயின்றவரது மனதும், தன திடம் நம்பிக்கையற்றிருப்பது இயல்பாதலின், அறிவிற் குன்றிய எனது மொழிபெயர்ப்பான இந்நூலைக் கல்விமான்கள் கண்டு மனமொப்பி யளிக்கும் கருத்தைப் பெறுமளவும், இஃது நன்கமைந்ததென நினைக்கின்றேனில்லை.

MADRAS, 1-5-1913.

இங்ஙனம்
ஆயுர்வேதபூஷண
மேல்பாக்கம், துரைஸ்வாமி ஐயங்கார்.

ஸ்ரீ

# மேகஸந்தேசம்

## முதல் ஆச்வாஸம்

ஒரு [1]யக்ஷன், தனது கடமையில் தவறுதலுற்று, மனதைக் கவரும் வடிவழகு வாய்ந்த மனைவியின் [2]பிரிவை யுண்டுபண்ணியதால் தாங்க வியலாததும், ஓராண்டளவும் அனுபவிக்க வேண்டுவதுமான—தன் பிரபுவான குபேரனது—சாபத்தினால் மறைவுற்ற மஹிமையை யுடையவனாய், ஜானகி நீராடி மிகவும் புனிதமான நீர்களைப் பெற்றனவும், நிரம்பவும் செழிப்பாக நிழலைத் தந்து அழகாய் நிற்கும் மரங்களை யுடைய

1. யக்ஷன் = தேவர்களில் ஓர் ஜாதி.

2. பிரிவை யுண்டுபண்ணியதால் தாங்க வியலாததும் என்பதற்குப் பதிலாக 'காந்தாவிரஹகுருணா' என்பதற்கு மனைவியின் பிரிவாற்றாமையை யுபதேசிக்கும் ஆசிரியனும் [கனவிலும் காதலியின் பிரிவாற்றாமையை யுணராத யக்ஷனுக்கு 'இல்லாளின் விரஹம் இவ்விதமானது' என்று சாபமே இப்பொழுது புதிதா யுபதேசிப்பதுபோ லிருப்பதால், அச் சாபத்தை இப் பிரிவாற்றாமையை அறிவிப்பதற்க்கு ஆசிரியனெனக் கொள்ளவேண்டும்.] என்று பூர்ணஸரஸ்வதி வரைகின்றான்.

வையுமான [1]இராமகிரியிலுள்ள ஆச்ரமங்களின்கண் வாஸம் செய்து வந்தான். 1.

காதலியை விட்டுப் பிரிந்தவனும், ஆகவே [2]கனக மயமான கங்கணம் நழுவி விழுந்தமையால் சூனிய மான கரத்தின் மணிக்கட்டையுடையவனுமான அக் காமுகி, அம் மாமலையிற் சில மாதங்களைப் போக்கிய பின், [3]ஆடிமாதத்து முதல் தினத்தன்று, விளையாட்டாகக் குன்றத்தின் சாரலைக் கொம்புகளைக் கொண்டு குறுக்காயிடிக்கும் குஞ்ஜரம்போல் கண்ணைக் கவர்வதான மலைச்சாரலைத் தழுவிநிற்கும் கார் முகிலொன்றைக் காணலானான். 2.

குபேரனது குற்றேவற்காரனை [4]அவ்வியக்கன், தாழம்பூக்களைச் செழிப்பிக்கக் காரணமான அக் கார் முகிலுக்கு எதிரில் ஒருவாறு வருத்தமுற்று நின்று, கண்ணீரைப் பெருகவிடாமற் பெருமுயற்சியால் அடக்கியவனாய் நெடு நேரம் ஏதோ எண்ணங்கொள்ள லாயினன்; கவலையற்றுக் களித்திருப்பவனது மனதும், மேகத்தை நோக்குங்கால் மாறுதலுற்று மழுக்கங் கொள்ளும்; இத்தகைய காலத்திற் கழுத்தைத் தழுவி

---

1. சித்திரகூடமலை யென்று சிலர்.

2. விரஹிகள் ஒரு கரத்தில் மட்டும் வளையொன்று இட்டுக்கொள்வது முறை. [பிரிவாற்றாமையால் இவன் மிகவும் இளைத்துப்போனதால் கையிலிருந்த கங்கணம் நழுவிப் போயிற்று எனக் கருத்து.]

3. ஆடிமாதத்தின் இறுதியில் (ஆஷாடஸ்ய ப்ரசமதிவஸே) என்று வல்லபதேவனுடைய பாடம்.

4. இயக்கன் = யக்ஷன்.

ஆலிங்கனம் செய்வதில் ஆவலுள்ள நாயகி நெடுந் தூரத்திற் பிரிந்திருக்கையிற் கேட்கவும் வேண்டுமோ! 3.

அவன், ஆவணிமாதம் நெருங்கி வருங்கால், தனது இன்பமுற்ற இல்லாள் உயிர் பிழைத்திருத்தலை உத்தேசித்து, தன் க்ஷேமவிருத்தாந்தத்தை மேகத்தின் மூலமாகக் கூறி யனுப்ப விருப்பங்கொண்டு, அவ் வம்புதத்தினிடம்[1] அன்பு பாராட்டியவனாய், அப் பொழுதே மலர்ந்த குடமல்லிகைமலர்கள் கொண்டு [2]அர்க்கியமளித்து, பிரீதியை முன்னிட்டு அதற்கு நல்வரவு கூறினன். மன்மததாபத்தினால் மனநோயுற்றவர், அறிவுடையோரிடத்தும் அசேதனங்களிடத்தும் தம தெளிமையை முறையிடு மியல்பின ராதலின், அவ்வியக்கன், ஆவலதிகரித்தமையால்—புகை ஒளி நீர் வாயுவென்னும் இவற்றின் சேர்க்கையாலாகிய மேகமெங்கே! கூர்மையான புலன்களைப் பெற்றப் பிராணிகளைக்கொண்டு செப்பி யனுப்பக்கூடிய செய்திகளெங்கே!—எனப் பகுத்தறிய வல்லமையற்றவனாய், அம் மேகத்தை நோக்கிப் பின் வருமாறு வேண்டத் தொடங்கினன். 4. 5:—

"அப்பா! நீ புவனத்திற் புகழ்பெற்ற புஷ்கலாவர்த்தமென்னும் மேகங்களின் குலத்தில் உதித்தவனெனவும், மஹேந்திரனுடைய மனதுக்கிசைந்த வண்ணம் மாற்றுருவங்களெடுக்கவல்ல அதிகாரபுருடனெனவும் யான் அறிவேன்; ஆகவே, நற்குணம் நிரம்

---

1. அம்புதம் = மேகம்.
2. அர்க்கியம் = பூஜோபசாரம்.

பியவரிடத்து யாசித்தற்பயனுறுமற்போயினும் சிறப்பு, அவ் வேண்டுகோள் இழியவரிடத்துப் பயன் பெறினும் பெருமையுறாது எனக் கருதி, யான் விதிவசத்தினால் வெகு தூரத்திற் காதலியை விட்டு விலகியவனாய் உன்னிடம் வேண்டிக்கொள்ள வந்தேன். தண்ணீரைத் தந்தருளும் கார்முகிலே! நீ, தாபத்தினால் தவிப்பவருக்கெல்லாம் சரணமா யிருக்கின்றனையாதலின், தனபதியின்[1] சினத்தினாற் பிரிக்கப்பெற்றுப் பரிதவிக்கும் என் பிரியதமைக்கு எனது செய்தியை அறிந்தேகிச் செப்புவாயாக; நீ செல்லவேண்டிய இடமோ, யக்ஷேச்வரருடைய வாஸபூமியான அளகை யென்னும் புகழ்பெற்ற நகரம்; அஃது, வெளிப் புறத்துச் சிங்காரவனத்தின்கண்[2] வீற்றிருக்கும் சிவபெருமானது சிரஸ்ஸிலுள்ள இந்துவின் சந்திரிகையினால் மெழுகப்பெற்று மாசற்ற மாட மாளிகைகளை யுடையது. நீ வாயுமார்க்கத்தினில் ஏறிச் செல்லுங்கால், வெளிதேசம் சென்றவரின் வனிதைகள், இனி தமது க்ணவர் கடுக வந்திடுவரென நம்பி [3]ஆறுதலுற்று, முன்னெற்றிமயிர்முனைகளை மேற்புறமாகத் தள்

1. தனபதி = குபேரன்.

2. கைலாஸமலையைச் சார்ந்த கந்தமாதனம் என்கிற பெரிய குன்றத்தின்மீது தென்புறமாயுள்ள கந்தமாதனம் என்கிற அதே பெயர்கொண்ட உத்தியானவனமே, இங்குச் சிங்கார வனம் என்கிற பெயரால் குறிக்கப்படுகிறது என்று பூர்ண ஸரஸ்வதி வரைகின்றான்.

3. மாரிகாலத்தில் நீர்கொண்ட மேகங்களைக் கண்ட விரஹிகள், ஆவலதிகரித்து மனைவிகளை விட்டுப் பிரிந்திருக்க மனமொப்பார்.

ஸிக்கொண்டு உன்றனை உற்றுநோக்கப் போகின்றனர்; ஏனெனில், என்றனைப் போல் பிறருக்கு அதீனமான பிழைப்பைப் பெறாத மற்றெந்த மனிதன்தான், நீ ஆகாயத்தில் ஆயத்தமாய்த் தோன்றியிருக்க, பிரிவாற்றாமையினால் மிக மனத்துயரமுற்ற மனைவியை இங்ஙனம் உபேக்ஷித்திருப்பன்! 6-8.

"இப்பொழுது மாருதமும் மெல்ல மெல்ல நீ செல்லவேண்டிய திசைநோக்கி உன்றனை எங்ஙனம் ஏகுவதற்கு[1] ஏவுகின்றதோ, மிகச் செருக்குற்ற சாதகபக்ஷியும் இதோ நின்றனக்கு இடதுபுறமாய் நின்று எங்ஙனம் இனிதாகக்[2] கூவுகின்றதோ, அதற்கேற்றவாறு, [3]நாரை யென்னும் பறவைகள் நேத்தி

---

1. வாயுவானது, மேகத்தின் பிரயாணம் பயனுள்ளதாகுமென அதை உடனே புறப்படத் தூண்டுவதுபோல் தோற்றுகிறது எனக் கருத்து. [ஒருவன் போகவேண்டிய திக்கை நோக்கி அவனுக்கு அனுகூலமாய் வாயு மெதுவாக வீசுமானால், போகும் காரியம் கைகூடுமென்று சாஸ்திரம். 'பவநஸ்யாநுகூலத்வாத் ப்ரார்த்தநாஸித்திசம்ஸிந:'—தான் போகும் திசைநோக்கி வாயு அனுகூலமாய் வீசுவதால் கோரிக்கை நிறைவேறு மென்று அஃது குறிக்கின்றது—என இரகுவம்சம்.]

2. சாதகபக்ஷி இடதுபுறமாயிருந்து கூவுமாயின் காரியம் ஜயமாகும்—என வராஹமிஹிரன்.

3. நாரை, கொக்கு முதலிய பறவைகள் மாரிகாலத்தில் ஆகாயத்திற் பறந்தோடுவதும், அப்பொழுது அவை கருத் தரிப்பதும் வழக்கமென்று கவிகள் வர்ணிக்கின்றனர்; ஸ்ரீமத்ராமாயணத்திலும் இங்ஙனம் வர்ணிக்கப்பட்டுளது—"மேகாபிகர்மா பரிஸம்பதந்தீ ஸம்மோதிதா பாதி பலாகபங்க்தி:"—

ரங்களால் நோக்க நேர்த்தியா யிருக்குமாறு வானத்தி னில் வரிசையாகப் பறந்துகொண்டு—நினதிடம் கருத் தரிக்கும் பழக்கத்தைப் பெற்றிருப்பதால்—நின்றனை நாடி வரப்போவது [1]நிச்சயமே. ஆகையினால், நீ இடை யூறின்றி இங்கிருந் தேகியவனாய், கழியும் நாட்களைக் கணக்கிடுவதிற் கருத்துகொண்டு, பதிவிரதாதர்மத் தைப் பரிபாலித்துவரும் உனது [2]உடன்பிறந்தோனது காதலியை அபாயமின்றி உயிர்பிழைத்திருக்கக் காணப்போவதுண்மை. மலர்களைப் போல மிகவு மெளிய வலிமையைப் பெற்ற மங்கையரின் இருதயம் அந்த க்ஷணத்தில் ஆபத்துறுவதற்கு ஆயத்தமா யிருந் தும், ஆசையென்னும் பாசமானது கணவனை விட்டுப் பிரிந்திருக்குங்கால் அதைக் கட்டிக் காத்துவரும். எங்கும் கிளைத்தெழும் [3]காளான்களால்—புவியைச் சூனியமாக்காது—செழிக்கச் செய்ய வல்லதும், செவி களுக்கினியதுமான நினது முழக்கத்தைக் கேட்டு, மானஸமென்னும் பொய்கைக்குப் போகப் பேரவா

---

மேகங்களிடம் காதல்கொண்டு, களிப்பூட்டப் பெற்று, அவற் றினூடே வரிசையாகப் பறந்தோடும் நாரைகள் மிகவுமழ காய் விளங்குகின்றன; என்று.

1. இதனால் மேகத்திற்கு உத்ஸாஹமுண்டாய் பிர யாணமாகுமென்று நினைத்து, அதன் நன்மை கூறப்பட்டது; பிறகு தன் காரியமும் பயன் பெறுமென்று ஊஹித்துக் கூறு கிறான்.

2. அதிக நேசப் பற்றுண்டாயிருப்பதாலும், பரோப காரியானதாலும் மேகம் தர்மத்தினால் தனக்கு உடன்பிறந்த தெனக் கருதுகிறான்.

3. காளான்—நாய்க்குடைபோன்றதோர் பூண்டு.

கொண்ட இராஜஹம்ஸங்களும், கைலைமலையளவும், தளிர்போன்ற தாமரைக்கிழங்குகளை [1]ஆற்றுணவாகப் பெற்று ஆகாயமார்க்கத்தில் உன்றனுக்குத் [2]துணையாக வரப்போகின்றன. யாதொரு மலையானது மாரிகாலந்தோறும் நினது சேர்க்கையைப் பெற்று, வெகு காலம் பிரிந்திருந்ததா லுண்டாகிய வெப்பத்தினால் உஷ்ணமான [3]பாஷ்பத்தைப் பெருக்கி, உனதிடமுள்ள [4]ஸ்நேஹத்தை வெளியாக்குகின்றதோ, அத்தகைய அரிய நண்பனும், புருடனைவராலும் பணியத் தகுந்த ஸ்ரீராமனது திருவடிகளின் சின்னங்

1. ஆற்றுணா = வழிகளில் உண்பதற்குக் கொண்டுபோகும் கட்டுச் சோறு.

2. தனிவழியிற் செல்வது தகாது என்று சாஸ்திரங் கூறுவதால், நற்சகுனங்கள் நேரிடுவதற்கேற்ப, ஹம்ஸம் முதலியவை வழித்துணையாகவும் ஏற்படும் எனக் கருத்து, [அன்னப்பறவைகள், மாரிகாலத்திற் கைலாயத்திற்கு அருகிலுள்ள மானஸமென்னும் திவ்ய ஸரஸ்ஸுக்குப் போகும் எனக் கவிகள் கூறுவது முறை.]

3. பாஷ்பம் = நீராவி, கண்ணீர்; 4. ஸ்நேஹம் = வழுவழுப்பான திறம், அன்பு என்று ஒவ்வொன்றுக்கும் இரு பொருள்களுண்டு. [ஒருவன் தன் தோழனை விட்டு வெகுநாள் பிரிந்திருந்து மறுபடி அவனுடன் சேர்ந்தால், அப்பொழுது ஆனந்தபாஷ்பத்தைப் பெருக்கி அன்பைவெளியாக்குவது போல், மலையானது தன் தோழனெனத் தகும் மேகத்தை விட்டுப் பிரிந்து நெடுநாட்க ளானபின், மீண்டும் அத்துடன் சேருங்கால், அதன் நீர் தன்மேல் விழுவதால், நீராவியை ஆனந்தபாஷ்பம் போல் கக்கி, வழவழப்பான—நேசப்பான்மையெனத் தகும்—திறங்கொள்ளுமெனக் கருத்து.]

களைப் பெற்ற அடிவாரத்துடன் கூடியதுமான இவ் 1 வுயர்வு பெற்ற பர்வதத்தைத் தழுவிக்கொண்டு, போய் வருவதாகக் கூறி, அதைப் பெருமை படுத்துவாயாக. 9-12.

"நீர்கொண்ட மேகமே! நீ, அவ்வப்பொழுது சோர்வடையுங்கால் சைலங்களின்மீது தங்கி யிருந்தும், அடிக்கடி மெலிவுறும் பொழுது நதிகளின் மிகத் தெளிவான தண்ணீரைப் பருகிக்கொண்டும் எந்த வழியினுல் எளிதில் ஏகலாமோ, அவ்விதமான மார்க்க மனைத்தையும் முதலில் யான் சொல்லக் கேள்; அதன் பிறகு, எனது மனைவியின்பொருட்டுச் செப்பப்படும் செவிகளுக் கின்பமான செய்திகளை என்றனிடமிருந்து செவியுறப்போகின்றனை[2]. 13.

"[3]ஸித்தர்களின் ஸுந்தரகுணமமைந்த சிறு மங்கையர்கள்,—இஃதென்னே! மாருதம் மலையின் சிகரத்தை இழுத்துச் செல்வதுபோலிருக்கின்றதே!—எனப் பிரமித்து, அஞ்சியஞ்சி அண்ணாந்து நோக்கி, உனது அரிய உத்ஸாஹத்தை யறிய, நன்கு செழித்து வளர்ந்த நீர்வஞ்சிக்கொடிகளடர்ந்த இவ்விடத்தி லிருந்து கிளம்பி, மார்க்கத்தில் திக்கஜங்களினது திரண்ட துதிக்கைகளின் மதித்தச் செயலிலிருந்து மீண்டு, வடதிசைநோக்கிச் செல்லக்கடவாய். 14.

"இதோ முன்புறத்தில் மணிகளது ஒளிகளின்

---

1. உயர்வு = உன்னதம், பெருந்தன்மை.

2. முதல் ஆச்வாஸத்தில் மார்க்கங்களும், இரண்டாம் ஆச்வாஸத்தில் செய்திகளும் செப்பப் படும்.

3 ஸித்தர் = தேவஜாதியில் ஓர் வகுப்பினர்.

திரள்போல் தோற்றும் இந்திரதனுஸ்ஸின் முனையொன்று, [1]புற்றின் உச்சியிலிருந்து உதிக்கின்றது! மனோஹரமான காந்தி பொருந்திய மயிற்றோகையணிந்து ஆயர்வேடம் பூண்ட அத் திருமாலின் மேனிபோல், இவ்விந்திரதனுஸ்ஸின் சேர்க்கையினால் நினதுருவம் நீலநிறத்தை நிரம்பவும் பெற்றுச் சிறப்புறப் போகின்றது. 15.

"வேளாண்மையில் நறபயன் விளைவது நின்றனக்கு அதீனமென நினைத்து நேசப்பான்மை கசிந்து குளிர்ந்தனவும், புருவநெறிப்பு முதலிய விலாஸங்களறியாதனவுமான நாடுகளிலுள்ள நங்கையரின் நேத்திரங்களால் நீ [2]அருந்தப்பெற்று, அப்பொழுதே கலப்பையினால் நன்குழப்பெற்று [3]நறுமணம் வீசும் மாலம் என்னும் ஓர் மேடான பூமியின் மேலேறி, சிறிது மேற்றிசையாகத் திரும்பி, [4]வேகமாகச் சென்று, மீண்டும் வடதிசைநோக்கி ஏகுவாயாக. 16.

---

1. இந்திரதனுஸ்ஸு ஜலத்திலுண்டானால் அநாவிருஷ்டியும், பூமியிலிருந்துதித்தால் பயிர்ச்சேதமும், மரத்திலுதித்தால் மனிதருக்கு வியாதியும், இரவிலுண்டானால் அமைச்சருக்கு நாசமும், புற்றிலிருந்துதித்தால் ஆயுதபயமும் ஏற்படும் என்று சாஸ்திரம் கூறுவதால், அதைக் கொண்டு, புற்றிலிருந்து இந்திரதனுஸ்ஸு உதிப்பதாகக் கவியினால் மொழியப்பட்டது. [இந்திரதனுஸ்ஸைக் காண்பது பிரயாணத்திற்கு மங்களகரமென்று பெரியோர் மொழிவது முறை.]

2. நேத்திரங்களால் அருந்தல் = கண் குளிரப் பார்த்தல்.

3. கோடைகாலத்து வெய்யிலால் நன்குலர்ந்த பூமியில் சிறிது மழை பெய்ததும் உழுங்கால் ஒருவித மணம் உண்டாவதியல்பு.

4. நடுவில் தங்குவதற்குத் தகுந்த மலைகளில்லாமையால், அங்கு வேகமாய்ச் செல்வது அவசியமாம்.

"அப்பால் [1]ஆம்ரகூடம் என்னும் குன்றமொன்று, வழிகளைக் கடந்து வந்த களைப்புடன் கூடியதும், மழையைப் பொழிந்து அடவியின் அனலை அவித்துதவி செய்ததுமான உன்றனைத் தலையாலே தாங்கப் போகின்றது; ஏனெனில், [2]இழியவனுங்கூட, தோழனொருவன் தனதிடமிருப்பதற்கு நாடிவருங்கால், அவன் முதலிற் பெற்ற நன்மையைக் கருதி, பராமுகமாயிருக்கின்றானில்லை; அங்ஙனமிருக்க, அவ்வளவு [3]உயர்வு பெற்றபர்வதம், உதவிசெய்த உனதிடம் பக்ஷமாயிருக்குமெனக் கூறவும் வேண்டுமோ? நன்கு பழுத்துக் குலுங்கும் கனிகளால் துலங்குவதான வனத்திலுள்ள மாமரங்களால் மறைக்கப் பெற்ற பாரிசங்களையுடைய அப் பர்வதம், தனது சிகரத்தின்கண் [4]நீலவேணிக்கு நிகரான நிறம் பொருந்திய நீ ஏறியிருக்குங்கால், நடுவிற் கறுத்தும் வெளிப்புறமெங்கும் விசாலமாய் வெளுத்துமிருக்கும் பூதேவியின் கொங்கைபோலெனத் தேவதம்பதிகள் கண்டு களிக்கக் கூடிய நிலைமையை நிச்சயமாய்ப் பெறப்போகின்றது. மறவாது மங்கையர் மகிழ்வுடன் விளையாடியனுபவித்த கொடிவீடுகளுடன் கூடிய அக் குன்றத்தினிற் சிறிது நேரம் நீ தங்கியிருந்து, ஆங்கு நீரைச் சொரிந்தபின் உனதுடல் இலகுவாகப் போகுமாதலின், நீ வெகு துரித

---

1. கொடிமுடியில் ஆமாமரங்கள் விசேஷமாயிருப்பதால் 'ஆம்ரகூடம்' என்று பெயர் வந்தது.

2. இழியவன்—அற்பன், உருவத்திற் சிறியது (மலை) என்றும் பொருள்.

3. உயர்வு—உன்னதம், மேன்மை என இரு பொருள்.

4. நீலவேணி—நீலநிறமான தலைப்பின்னல்.

மாகச் சென்று, அதற்கப்புறமுள்ள பாதையையும் கடந்தேகக் கடவாய்; அப்பால், வேழத்தினுடலில் வரிவரியாயிடப் பெற்ற விபூதிக்கோடுகளைப் போல், **விந்தியமலையின்** கற்களால் கரடுமுரடான அடிவாரத்தினிற் பலவாறாகச் சிதறியோடும் [1]**நர்மதை** யென்னும் நதியைக் காணப்போகின்றனை. 17-19.

" அப்பா மேகமே! நீ தண்ணீரைக் கக்கிய பின், காட்டானைகளின் [2]திக்தமான மதநீர்ப் பெருக்குகளால் [3]வாஸனை யேற்றப் பெற்றதும், நாவல்மரப் புதர்களால் வேகந்தணிந்த வெள்ளத்தையுடையதுமான நர்மதாநதியின் நீரை யெடுத்தேகவேண்டும்; அங்ஙனம் செய்தனையாயின், வாயுவானது, [4]அந்தஸ்ஸாரத்தைப் பெற்ற உன்றனை அசைத்துச் சிதறடிக்க

---

1. விந்தியமலையை யானையாகவும், நர்மதையின் பிரவாஹங்களை அந்த யானையினுடலி லிட்ட விபூதிக் கோடுகளாகவும் கருதவேண்டும்.

2. திக்தம் = மணமுள்ளது, கசப்பானது. 3. வாஸனை யேற்றல் = மணமுண்டாக்குதல், பாவனைசெய்தல் (சில கெட்டிப் பொருட்களை, சில திராவகங்களில் ஊறவைத்து, அத் திராவகங்களின் ஸத்துக்களை அக் கெட்டிப் பொருட்களிலேற்றுவது பாவனை.) 4. அந்தஸ்ஸாரம் = நீரை உள்ளடக்கியது, நல்ல வலிமையுள்ளது. [நீராகும் கபத்தைக் கக்கி, சுத்தமான குடலைப் பெற்ற மேகமாகும் மனிதன், கசப்பான மதநீர்களாகும் மருந்துகளால் பாவனை செய்யப்பெற்றதும் இலகுவானது—அஜீர்ணம் பண்ணாதது—மான ஜலமாகும் கஷாயத்தைப் பருகி, நல்ல வலிமையைப் பெற்று, பின்பு காற்றாகும் வாதரோகத்தினால் பீடிக்கப்படமாட்டான் என்கிற ஓர் உட்கருத்துண்டு.]

வல்லமையற்றதாகும்; ஆம்; வறுமையானது [1]இலாகவத்திற்கும், வளமைக் [2]கௌரவத்திற்கும் காரணமாகின்றன. ஆங்கு, சிறிது வளர்ந்து வெளிவந்த தாதுகளால் பசுங்கபில நிறமான கடப்பம் பூவென்ன, நீரோரங்களில் அப்பொழுதே முளைத்துவரும் முதலரும்புகளையீன்ற நிலவாழைகளென்ன இவற்றைக் கடித்துக்கொண்டும், வெயில் முதலியவற்றால் வெந்துபோன வனத்திலுள்ள நிலத்திலிருந்து நிரம்பவும் பரவிவரும் நறுமணத்தை முகர்ந்துகொண்டும் திரியும் மான்களானவை, தமது அச் செயல்களால், நீ அவ்வழி நெடுக நீர்த்துளிகளைச் சொரிந்துகொண்டேகியதை அறிவிக்கப்போகின்றன. அன்பார்ந்த நண்பனே! நீ எனது நேசத்தின்பொருட்டுக் கடுகச் செல்லவேண்டுமெனக் கருதுவாயாயினும், மருதமலர்களால் மணம்பெற்றிருக்கும் மலைகள் தோறும் நின்றனக்குக் காலதாமதம் நேரிடுமென நினைக்கின்றேன்; அன்றியும், கானகத்து மயில்கள், கண்ணீர் ததும்ப [3]அகவல் பாடி முகமன் கூறி [4]முன்வந்து நின்றுனை மேன்மை படுத்துங்கால், நீ விரைவாகச் செல்ல முயல்வதெங்ஙனம்?

20 - 22.

"பின்னர், நீ, எவ்விதத்திலேனும் அவ்விடம் விட்டுப் புறப்பட்டு, **தசார்ணம்** என்கிற தேசத்திற்கு அருகிற் சென்றதும், அத் தேசம், சிறிது மலர்ந்த நுண்

1. இலாகவம் = இலேசு, எளிமை.
2. கௌரவம் = பாரம், மேன்மை.
3. அகவல் = கேகா என்கிற மயிலின் சப்தம்.
4. முகமன் = உபசார மொழி.

ணிய முனைகளையுடைய தாழம்பூக்களால் வெண்மை யான வேலிகளைப் பெற்ற உத்தியானவனங்களை யுடைய தாகவும், கூடு கட்ட முயன்ற காகம் முதலிய ஊர்ப் பறவைகளின் ஆர்ப்பரிப்பால் குழப்பங்கொண்ட அரசு முதலிய பூஜைக்குரியக் கிராமவிருக்ஷங்களுடன் கூடிய தாகவும், நன்கு முதிர்ந்த கனிகளால் கறு நிறமான நாவல்மரங்களால் மனோஹரமாகவும், அன்னப்பற வைகள் சிலநாள்மட்டும் தங்கியிருக்கத் தகுந்ததோ ரிடமாகவும் [1]ஆகப்போகின்றது. அத் தேயத் தின்கண், திசைகளெங்கும் புகழ்பெற்று விளங்கும் **விதிசை** யெனப் பெயர்கொண்ட இராஜதானி யொன்றுண்டு; நீ அவ்விடம் சென்று, உனது ஆவலுக்குத்[2] தகுந்ததோர் பெரும் பயனை உடனே பெறப்போகின்றனை; எங்ஙனமெனில், ஆங்கு **வேத்தி ரவதீ** யென்னும் ஆற்றின் கரையோரத்தி லுண்டா கும் முழக்கத்தினால் மனோஹரமானதும், அங்குமிங்கு மசையும் அலைகளுடன் கூடியதும், மிகவும் இனியது மான தண்ணீரைப் புருவ நெறிப்புடன் கூடிய பெண் மணியின் முகத்தைப்போல் [3]பருகப்போகின்றனையே!

---

1. மாரிகாலத்தில் மழை பொழியுங்கால் தாழை மலர் வதும், பக்ஷிகள் பரபரப்புடன் கூடு கட்டிக் கொள்வதும், நாவல் பழுப்பதும், ஹம்ஸங்கள் மானஸஸரஸ்ஸிற்குப் போவது மியல்பு.

2. ஆவல் — நீரைப் பருகுதலில் ஆசை, காதல் என இரு பொருளுண்டு.

3. அந் நதியாகும் பெண்மணியின், கரையோரத்தி லுண் டாகும் முழக்கமாகும் மணித மென்கிற தொனியையுடைய தும், அலைகளாகும் புருவநெறிப்புடன் கூடியதுமான ஜலமா கும் முகத்தை, மேகமாகும் காமுகி அருந்துவதாக உட்கருத்து.

அந் நகரத்திற்கு அருகில் நீசை என்கிற குன்றத்தின் மீது இளைப்பாறுவதன் பொருட்டுத் தங்குவாயாக; அப்பொழுது, நினது சேர்க்கையினால் கடப்பமரங் கள் [1]நன்கு விகஸித்த மலர்களை யீன்று நிற்க, அவற்றால் அப் பர்வதம் [2]புளகாங்கிதமானது போல் தோற்றும். அக்குன்றமானது, விலைமாதர் விளையாடுங்கால் அவரது மேனிகளிலிருக்கும் பரிமளங்களை வெளியிற் பரவச் செய்யும் [3]குஹாகிருஹங்களால், அந் நகரத்திலுள்ள ஜனங்களின் தட்டுத்தடையில்லாத வாலிபதசைக்கு இயல்பான விலாஸச் செயல்களை விளங்கச் செய்கின் றது. இங்ஙனம் நீ இளைப்பாறியபின், பூப் பறிக்கும் பெண்கள் தமது கபோலங்களிலுண்டாகும் வியர் வையைத் துடைக்கையில், கரங்கள் தாக்கி வாடிய காதிலுள்ள நைதல் மலருடன் கூடிய அவரது முகங் களுக்கு நீ நிழலைக் கொடுத்து, நொடிநேரம் அம்முகங் களின் பரிசயத்தைப் பெற்று, காட்டாறுகளின் கரை களிலுள்ள சோலைகளிலுண்டான முல்லைமொட்டுகளை நூதன நீர்த்திவலைகளால் நனைத்துக்கொண்டே அப்பு றம் அசைந்து செல்வாய். 23 - 26.

"அப்பால் வடதிசைநோக்கிச் செல்லும் உன்ற னக்குப் பிற் கூறப்படும் பாதையானது சிறிது [4]சுற்றாக

---

1. மயிர்ச் சிலிர்க்கைகளுக்கு - மலராத மொட்டுகளை யீன்று - எனக் கூறுவதே சான்றுமெனக் கருதி 'அப்ரௌட புஷ்பை:' என்கிற பாடத்தைப் பூர்ணஸரஸ்வதி வரைகிறான்.

2. புளகாங்கிதம் = மயிர்ச் சிலிர்க்கை.

3. குஹாகிருஹங்கள் = கிருஹங்களைப் போல் அமைந் துள்ள குகைகள்.

4. உஜ்ஜயினியானது, விந்தியமலையிலிருந்து வடக்கு

வாயினுமாகட்டும்; உஜ்ஜயினீநகரத்து மாடிமாடங் களிற் பிரீதி பாராட்டுவதில் மட்டும் நீ பராமுகமாயி ருத்தலாகாது; மின்னியொளிக்கும் நினது மின்னற் கொடியைக் கண்டு அச்சமுற்று அசையும் கடைக் கண்களையுடைய நகரத்து நங்கையரின் நேத்திரங் களுக்குப் பாத்திரமாய், அதனால் ஆனந்தமனுபவிக்கா மற் போவாயாயின் நீ [1]வஞ்சிக்கப் பெற்றவனவாய். உஜ்ஜயினிக்குப் போகும் பாதையில், அலைகளால் தாக் கப்படுவதுபற்றி ஆர்ப்பரிக்கும் நீர்வாழும் பறவை களின் பந்தியாகும் [2]அரைநூண்மாலையைப் பெற்று, நீர்ச்சுழியாகும் நாபியை விளங்கச் செய்துகொண்டு, இடறியிடறி இரமணீயமாய் ஓர் அங்கனைபோல் அசைந்தோடும் **நிர்விந்த்யை** என்னும் நதியினிடம் சேர்ந்து [3]இனிதான நீரை உட்கொள்வாயாக; [4]மா தர்கள், காதலர்களிடம் நடை யுடை முதலியவற்றால்

---

முகமாய் ஓடும் நிர்விந்த்யை என்னும் நதிக்குச் சிறிது கிழக் கிலுள்ளது; மேகம் செல்லவேண்டிய வழியோ, மேற்புறமாகச் சற்று ஒதுங்கியிருக்கிறது; ஆகையால் சிறிது சுற்றுவழியெ னக் கூறினன்.

1. உஜ்ஜயினிக்குச் சென்று ஆங்குள்ள ஸ்திரீரத்தினங் களைக் காணுமலிருப்பின், கண்கள் படைத்ததற்கும் ஜன்ம மெடுத்ததற்கும் பயனில்லாமற் போய்விடும் எனக் கருத்து.

2. நீர்ப்பறவைகள் வரிசையாயிருந்து ஆர்ப்பரித்தல், சதங்கைகளுடன் அரையிற்கட்டிய தங்கச்சங்கிலிக லகலவென்று சப்திப்பதுபோல் இருக்குமெனப் பொருள்.

3. இனிதாக இரஸானுபவம் செய்வாய் என்றும் சிலே டையாக மற்றோர் அர்த்தம் உண்டு.

4. நதிகளை ஸ்திரீயாக வர்ணிப்பது வழக்கம்.

விளக்கிக் காட்டும் விலாஸங்களே, அவரது இன்றியமையா இன்பமொழியாமன்றோ? 27-28.

"ஓ மேன்மையான மேனியழகு வாய்ந்த மேகமே! நீ அவ் வாற்றைக் கடந்தேகிய பின், ஸிந்து என்னும் நதியை ஸந்திக்கப்போகின்றனை; அஃது, [1]வேணி போல் வெகு மெல்லிய நீரோட்டமுடையதாய், தீரத்தின் ஓரங்களில் முளைத்திருக்கும் மரங்களிலிருந் துதிரும் பழுப்பிலைகளால் வெண்ணிறங்கொண்டு, உனது பிரிவாற்றாமையினாலுண்டாகிய அத்தகைய எளிய நிலைமையினால், நினது நிரதிசயமான [2]ஸௌபாக்கியத்தை அறிவிக்கப்போகின்றது; ஆகையால், அந் நதி, எவ்விதச் செயலால் தனக்குண்டான மெலிவை யிழந்து மேம்பாடடையுமோ, அதை நீ ஒருவனே நிறைவேற்ற [3]வல்லவனாகின்றனை. 29.

"பிறகு, உதயனன் என்கிற இராஜனது [4]கதையைக் கூறுவதில் திறமை பொருந்தியக் கிராமத்துக்

1. வேணி = தலைப் பின்னல். [கோடைகாலத்தின் இறுதியில் நீரெல்லாம் வற்றியிருக்குமானதால் ஆற்றின் நீரோட்டம் சிறுபான்மையே; மேலும் ஜலம் தெளிவுற்று நீலவர்ணமாயுமிருக்கும்; ஆகையால் அஃது வேணிக்கு ஒப்பிடலாயிற்று.]

2. ஸௌபாக்கியம் = ஸௌந்தரியம் முதலியவற்றால் மனதைக் கவரும் சக்தி.

3. விரஹவேதனையனுபவிப்பவள், தலைமயிரை ஒரு பின்னலாகப் பின்னி, உணவு வேண்டிராமல் மெலிவடைந்து, உடல் வெளுத்தது ஏங்கித் தவிப்பதுபோல் இந் நதியும் இருப்பதால், இந் நதியின் இவ்வெளிய நிலைமையை—நீரைச் சொரிந்துப்—போக்குவதற்கு மேகத்தாலன்றி வேறெவராலுமாகாது எனக் கருத்து.

4. கௌசாம்பீதேயத்தரசனும் வத்ஸராஜன் என்று வேறு பெயர் கொண்டவனுமான உதயனன் என்பவன்

கிழவர்களையுடையதான **அவந்தீதேயத்தை** யடைந்து, ஆங்கு, முற் கூறிய செல்வம் செழித்த விசாலை யென்று மற்றோர் பெயர்கொண்ட **உஜ்ஜயினீநகரத்தை** அணுகக் கடவாய்; அஃது, வானவர், தாம் செய்த புண்ணிய கர்மங்களின் பயனை மேலுலகிற் சிறிது அனுபவித்து, அந் நல்வினைப்பயன் அளவிற் குறைந்தும்—சிறிது மிகுந்திருக்கையிலேயே, அமரலோகத்தை விட்டு அவர் அவனியை யடைய, அவரது மிகுந்துள்ள புண்ணியகர்மங்களாற் படைக்கப்பெற்றதான கண்ணைப் பறிக்கும் காந்தி பொருந்திய விண்ணுலகின் ஓர் பகுதி யோவெனத் தோற்றும்.[1] அந் நகரத்தினில், விடியற் காலங்களில், மதங்கொண்ட ஸாரஸப்பறவைகளின் மிகத் தெளிவான இனிய தொனியை இடையறாது இசையச் செய்வதும், சிறிது மலர்ந்த தாமரைமலர்களின் மணத்துடன் சேர்வதால் பரிமளம் வீசுவதுமான, **சிப்ரை** யென்னும் ஆற்றிலிருந்து வரும் காற்றானது—வேண்டிக்கொண்டு நயவசனங் கூறும் நட்பு மிகுந்த நாயகனைப் போல், அங்குள்ள அங்கனைகளின்

---

அவந்திதேயத்தரசனான மஹாஸேனன் என்னும் மன்னவனது மாயச் செயல்களுக்குச் சிக்குண்டு, அவனால் தனது தேயத்திற்குக் கொண்டுவந்து சிறையிலிடப் பெற்று, யௌகந்தராயணன் என்கிற பிரதானமந்திரியின் பெரு முயற்சியினால் பின்பு மீட்கப் பட்டு, மஹாஸேனனை வென்று, வாஸவதத்தை யென்னும் அழகிய மகளொருத்தியை எடுத்து வந்து மணம்புரிந்தவனாய், தன் தேயமடைந்து, பெரும் புகழுடன் அரசு செலுத்தினன் ; என்பதே உதயனகதையின் சுருக்கமான வரலாறும்.

1. மிகுந்துள்ள நல்வினைப்பயன்களனைத்தையும் அனுபவிப்பதற்கு, அவர்களுக்கேற்றவாறு ஸ்வர்க்கத்தின் ஒரு பாகமே அப் பட்டணமாய் அமைந்தது போலும் ; எனப் பொருள்.

அங்கங்களுக்கு அனுகூலமாய் அசைந்து, கணவருடன் கிரீடை செய்ததாலுண்டான அவரது ஆயாஸத்தை அகற்றிவருகின்றது. நீ நெடுந்தூரம் வழி கடந்தேகியதால் இளைத்துப் போவாயாதலின், அவ் விடத்தில் மாளிகைகளது சாளரங்களின் வழியாக வெளிக் கிளம்பும்—மாதரது கூந்தலைப் பதனிடும்—தூபங்களால் நினது சரீரத்தைச் [1]செழிக்கச் செய்துகொண்டு, ஆங்கு, அகத்திலுள்ள மயில்களால், தமது நண்பன் வந்தானென நேசத்துடன் நர்த்தனமாடி நன்குபசரிக்கப் பெற்று,[2] ஸுகுமாரமான ஸுந்தரிகளின் பாதங்களிலுள்ள செம்பஞ்சுக் குழம்புகளின் பதிவுகளை அழகாகப் பெற்றனவும், புஷ்பங்களால் பரிமளம் பொருந்தியவையுமான அந் நகரத்தின் மேன்மை பெற்ற மாடங்களின்மீது இளைப்பாறிவிட்டு, பின்னர், [3]பிரமதகணங்கள், உன்றனை, தமது பிரபுவான பரமசிவனது கண்டத்தின் கறுநிறக் காந்தியோ வெனப் பேராதரவுடன் பிரமங்கொண்டு பார்த்தவாறிருக்க, மூவுலகுக்கு மீசனை சண்டிகாபதியின் அதி புனிதமான ஆலயத்தையடையக் கடவாய்; அவ் வாலயம், நீர்விளையாடி வெளி யேறிய வனிதைகளது நீராட்டஜலத்தின் நறுமணமேந்தியதும், நைதல்மலர்ப் பொடிகளின் பரி

---

1. முற் கூறியவாறு மேகத்தினுடலில் தூமமும் ஓர் அம்சமாதலால், அங்கு தூமத்தின் சேர்க்கையினால் மேகத்தின் தேஹம் செழிக்கக் கூடுமென்று கருத்து.

2. மயில்கள் மேகத்தைக் கண்டு மனக் களிப்புடன் தோகையை விரித்துக் கூத்தாடுவதும், அதனால் அவற்றிற்கு மேகத்தை நண்பனாகக் கூறுவதும் முறை.

3. பிரமதகணம்— சிவனது பரிவாரம்.

ழுளத்தைப் பெற்றதுமான கந்தவதீ யென்னும் ஆற்றி லிருந்து வரும் வாயுவால் அலைக்கப்படும் பூஞ்சோலை களாற் சூழப்பெற்றுள்ளது. நீர்கொண்ட மேகமே! நீ மற்றொரு ஸமயத்திலும் மஹாகாளமென்னும் க்ஷேத்திரத்தை யடைந்து, கதிரவன் கண்மறையுமள வும் காத்திருந்து,[1] சூலமேந்திய சிவபெருமானுக்கு மாலைப்பொழுதிற் பூஜை செய்யுங்கால் மிகக் கொண்டா டக் கூடியதான பறையறைப் பணியை நினது கர் ஜனைகொண்டுப் பணிவுடன் செய்தனையாயின், உனது கம்பீர முழக்கங்களுக்குப் பழுதிலாப் பயனைப் பெற்ற வனுவாய். அங்கு, தமது இடையிலுள்ள மேகலை யின் சதங்கை குலுங்க ஒழுங்காயடிவைத்து நடந் தேகும் நடனமாதுகள், பிடிகளிலிழைத்த மணிகளின் ஒளிகளால் மெழுகப்பெற்ற கணுக்களுடன் கூடிய கவுரிகளைக் கேளியாய் வீசிக் களைத்துப்போன கரங் களையுடையவராய், நாயகரது நகத்தழும்புகளுக்கு மிகவும் இதமான மழையின் முதற்றுளிகளை நின்ற னிடமிருந்தடைந்து, பின்னர், கரிவண்டுகளின் வரிசை போல் நீண்ட அவரது கடைக்கண்பார்வைகளுக்கு நீ பாத்திரமாகப் போகின்றனை.[2] பிறகு, அப்பொழுதே மலர்ந்த செம்பருத்திமலரைப் போல் சென்னிறங் கொண்ட அந்திப்பொழுதிலுண்டாகும் காந்தியைப்

---

1. பகற் பொழுதிலேயே போய்க் காத்திரு எனக் கருத்து.

2. மேகம், பரமசிவனைத் தொழுது பணிவிடை செய்த தின் பயனாக, உடனே, உத்தமஸ்திரீகளது கடாக்ஷவீக்ஷணத் தைப் பெற்றதென்க.

பெற்ற நீ,[1] நடராஜன் நர்த்தனம் செய்ய முயலுங்கால் அஞ்சாமற் பின்புறமாகச் சென்று, அவரது [2]நீண்ட புயங்களாகும் நெடிய மரங்களின் வனத்தினிடையில் வட்டமிட்டுப் புகுந்து, அக் காலே, பார்வதியும் நினது பக்தியுடன் கூடிய பணியை இமைகளசையாமற் பார்த்தவாறிருக்க, இரத்தங் கசிந்த யானையின் சர்மத்தை அணிவதில் அவ்வீசனுக்குள்ள ஆசையை அகற்றுவாயாக. அவ் வுஜ்ஜயினியின்கண், இரவில் அடர்த்தியான அந்தகாரத்தினல் இராஜமார்க்கம் [3]மறைக்கப் பெற்றிருக்குங்கால், காதலரது இருப்பிடம் நோக்கிச் செல்லும் பெண்களுக்குப் பொன்னிழைபோல் பளபளப்பான மின்னொளி கொண்டு நீ மார்க்கத்தை அறிவிக்கவேண்டும்; அவர் மிகவும் அச்சமுறுமியல்பினராதலின், நீ மழையைப் பொழிந்துகொண்டு முழக்கத்துடன் குமுறவேண்டாம். நினது மின்னொளியென்னும் இல்லாள்,[4] நெடுநேரம் ஒளிவீசிக் களைப்புறு மாகையால், நீ அதனுடன் இளைப்பாறுவதன் பொருட்டு, படுத்துறங்கும் மாடப்புறாக்களுடன் கூடிய ஏதேனும்

---

1. இச் சென்னிறத்தினல், இரத்தங் கசிந்த கஜசர்மத்திற்கு ஸமானமாக மேகம் வர்ணிக்கப்பட்டதென்றறிக.

2. சிவன், மாலைப்பொழுதில் ஆகாயத்தையளாவும் ஆயிரக் கணக்கான நீண்ட புயங்களை வீசிக்கொண்டு அட்டஹாஸத்துடன் நர்த்தனம் பண்ணுவதாகப் பிரஸித்தி.

3. மன்மதபாணங்கள் தாக்கி மிகக் குழப்பமுற்ற மனத்தினரான மங்கையர் காரிருளையும் கவனிக்காமற் காதலரிடம் செல்வதியல்பு.

4. மின்னலை ஸ்திரீயாகவும், மேகத்திற்கு மனைவியாகவும் கூறுவது வழக்கம்.

ஓர் மாளிகையின் கொடுங்கையின்கண் தங்கியிருந்து, அவ்விரவைக் கழித்து, மீண்டும் ஆதித்தன் உதித்த பின், மிகுந்துள்ள வழியையும் கடந்தேகக் கடவாய்; நேயர்கள், தாம் நிறைவேற்றுவதாக ஏற்றுக்கொண்ட காரியங்களைச் செய்து முடிப்பதில் இடையில் ஊக்கக் குறைவு பெறமாட்டாரன்றோ? 30—38

"அக் காலை, காதலர் வந்து கண்டிதை யென்னும் நாயிகைகளின்[1] கண்ணீரைப் போக்கவேண்டியிருப்ப தால், நீ, கதிரவனது ஒளி வரும் வழியைக் கடுக விட்டகல வேண்டும்; அவ்வாதித்தனும், தாமரையோடையாகும் தனது காதலியின் கமலமலரென்னும் வதனத்தில் ததும்பும் பனித்துளிகளாகிற கண்ணீரைப் போக்குவதற்குத் திரும்ப வந்திருக்கையில், நீ, அவனது கரங்களை[2] இடையிலிருந்துத் தடுப்பாயாயின், அவன் பெரிதும் பொறாமை கொள்வான். 39.

" அப்பால், **கம்பீரை** யென்னும் ஆற்றின் மிகத் தெளிவான மனமெனத் தகும் தண்ணீரினுள், இயற்கையிலேயே வெகு அழகு வாய்ந்த நினதுருவமே பிரதிபிம்பரூபமாய் பிரவேசிக்கப் போகின்றது; ஆதலால், அவ்வாற்றின் ஆம்பல்மலர்களால் வெளிறிய

---

1. கண்டிதை = தனது கணவன் பிறரிடம் காதல்கொண்டிருப்பதைக் கண்டு மனநோயுற்ற மாது.

2. கரங்கள் = கிரணங்கள், கைகள் என்றும் மற்றொரு பொருள். [சூரியகிரணங்கள் பட்டுப் பனித்துளிகள் உலர்ந்து விடுமாதலால், அஃது கைகளால் கண்ணீரைத் துடைப்பதற்கு ஒப்பிடப் படுகிறது. தாமரை யோடையை ஸ்திரீயாகவும், அது சூரியனைக் கண்டு மகிழ்வுறுவதுபோல் மலர்வதால் சூரியனுக்கு அதை மனைவியாகவும் கவிகள் மொழிவது முறை.]

வையும், குதுங்கித் துலங்குபவையுமான சிறு மீன்களின் துள்ளுதலாகும் கண்ணோக்கங்களை, நீ, வன்னெஞ்சனைப் போல் புறக்கணித்து விலக்குவதுசிதமல்ல.[1] நண்பனே! நீரளவும் படர்ந்துவந்த நீர் வஞ்சிக் கொடியாகும் கரத்தினால் பற்றிக் கொள்ளப் பெற்றதுபோல் தோற்றுவதும், இரு கரைகளாகும் கடிதடங்களினின்று விலகியதுமான கறுநிறங் கொண்ட அந் நதியின் ஆடை யெனத் தகும் நீரை யுறிஞ்சு அந் நதியின்பால் சாய்ந்திருக்கும் நின்றனக்கு, அங்கிருந்து மீண்டும் புறப்படுவது மிகப் பிரியாஸமாய் முடியும். 40-41.

" நீ அங்கிருந்து **தேவகிரியை** நோக்கிச் செல்ல முயலுங்கால், நினது மழைப் பெருக்கினால் ஊறிப் பொறுமலுற்ற நிலத்திலிருந்தெழும் மணத்தின் சேர்க்கையினால் மனோஹரமானதும், யானைகளால் அவற்றின் துதிக்கையின் த்வாரங்களிலிருந்து இனிய தொனி யுதிக்குமாறு[2] பருகப் பெற்றதும், அடவியிலுள்ள அத்திக்கனிகளை நன்கு பழுக்கச் செய்ய வல்லதுமான குளிர்ந்த காற்றானது உன்றன்மீது மெதுவாக வீசப்போகின்றது. நீ, நின்றனை மலர் சொரியும்

1. தெளிந்த தண்ணீருக்குள் மேகத்தின் பிரதிபிம்பம் விழுந்திருப்பதானது, அந் நதியாகும் பெண், காதலனைப் போன்ற கார்முகிலைத் தனதுள்ளத்தில் தியானித்திருப்பதாகவும், துள்ளி விளையாடும் மீன்களாகும் கண்களைக்கொண்டு தனதருகில் வந்திருக்கும் மேகத்தை அது நோக்குவதாகவும், அத்தகைய நதியை அனுஸரிக்காமல் அப்பால் செல்வது மேகத்திற்குச் சரியல்ல வென்பதாகவும் தாத்பர்யம்.

2. சில யானைகள், மதத்தின் வேகத்தினால் தாபம் மேலிட்டுக் குளிர்ந்த காற்றை உறிஞ்சுவது இயல்பாம்.

மேகமாகச் செய்துகொண்டு,[1] ஆகாயகங்கையின் நீர் தனில் நனைந்து ஈரமானவையும் நறுமணமுள்ளனவு மான மலர்களைக் கொண்டு, அக் குன்றத்தினில் என் றைக்கும் நிலையாய் வீற்றிருக்கும் ஆறுமுகக் கடவுளின் மீது ஆதாரவுடன் சொரிவாயாக; இளம்பிறையைச் சிரந்தனிலேந்திய சிவபெருமானால்,இந்திரனது ஸேனை யை இரக்ஷிக்கும்பொருட்டு அக்கினிமுகத்திலிடப் பெற்று, அங்கிருந்து ஆதித்தனுக்கும் மேலாக ஒளி வீசிய வண்ணமுதித்த மஹத்தான தேஜஸ்ஸல்லவோ அக் கடவுள்[2] ! பின்னர், மஹேச்வரனது முடியிலுள்ள மதியின் கதிரொளியால் வெளிறிய கடைக்கண்களை யுடையதான அக் கந்தபிரானது மயிலை, அம் மலையி லிருந்துண்டாகும் எதிரொலியுடன் சேர்ந்து மே லோங்கி வளர்ந்த உனது முழக்கங்களைக்கொண்டு தாண்டவமாடத் தூண்டக் கடவாய்; பார்வதியான

---

1. முன்பு 6-வது பத்தியத்தில் விளம்பிய வண்ணம், மேகத்திற்குக் காமரூபம்(இஷ்டம்வாய்ந்த உருவத்தை)எடுக்கத் தகுந்த வல்லமையிருப்பதாகக் கருதி, புஷ்பவர்ஷம் செய்யக் கூடிய மேகமாகப் போக வேண்டுகிறான். [கந்தோதக்ரம் ததது வவ்ரஷு: புஷ்பமாச்சர்யமேகா: = மிகவும் ஆச்சரிய கரமான மேகங்கள் மணம் மிகுந்த மலர்களைச் சொரிந்தன. என்று இரகுவம்சத்திலும் மேகம் புஷ்பவர்ஷம் சொரிந்ததா கச் சொல்லப்பட்டிருக்கிறது.]

2. தேவர்கள், தாரகாஸுரன் செய்த தீங்குகளைத் தாங்காதவராய், சிவபெருமானை வேண்டிக்கொள்ள, அவரது ஆஞ்ஞையினால் அக்கினிபகவான் தனதிடமுள்ள அச் சிவனது வீரியத்தைக் கங்காதேவியினிடம் விட, கங்கை அதைத் தாங்க முடியாமல் ஹிமாலயத்தின் ஓரத்தில் ஓர் நாணற்காட்டில் ஒதுக்க, அங்கிருந்து அத் தேஜஸ்ஸு சுப்பிரம்மணியனாக ஆவிர்ப்பவிக்க, பின்னர் அவரையே தேவர் ஸேனாதிபதியாகச் செய்தனர்; என்பது இக் கதையின் சுருக்கம்.

வள், அம் மயிலின் தோகையிலிருந்து நழுவி விழுந் ததும், மண்டலாகாரமாய் ஒளி வீசுந் தன்மையது மான இறகை, புதல்வனிடமிருக்கும் பிரீதியினால், தன் செவிதனில், முன்னாலணிந்திருந்த நைதல் மலரை யும் நீக்கிவிட்டு அணிந்து கொள்வள். 42—44.

" இங்ஙனம் சரவணபவனை [1] ஷண்முகக்கட வுளை ஆராதித்து, வீணை யேந்திய ஸித்த தம்பதிகள், நீர்த்துளிகள் வீழ்ந்துத் தமது வீணையின் இன்னிசை வீணாய்ச் சீர்குலையுமென்றஞ்சி,[2] நினது பாதையை விட்டு விலக, நீ, அப்பால், அதற்கப்புறமுள்ள வழிகளி லும் சிறிது தூரம் கடந்தேகி, ஸுரபி யென்னும்[3] கபி லையின் பெண்களான பல்லாயிரம் பசுக்களை வேள்வி களில் வதைசெய்ய அவற்றினின்றும் பெருகிய உதி ரத்தினால் உற்பத்தியானதும், தரணிதனில் இரந்தி தேவன் என்னும் தர்மபிரபுவின் புகழே உரு வெடுத்து வெள்ளமாகப் பெருகிய தோவெனப் பகரக்

---

1. சரவணபவன் = ஞாழற்காட்டிலுதித்தவன்.

2. ஸித்தரென்னும் தேவர்கள் தமது மனைவிமாருடன் சுப்பிரம்மணியனை வீணைகொண்டுத் துதிக்க வருங்கால், ஆங்கு மேகம் தூய்மையான ஜலத்துளிகள் நிரம்பிய புஷ் பங்களைக் குமரன்மீது குளிரச் சொரிய, அந் நீர்த்துளிகள் தமது வீணையில் வீழ்ந்து அதன் இனிய தொனியைக் கெடுத்தால், தமது கைங்கரியத்திற்குத் தடையுண்டாகு மென்றெண்ணி அஞ்சின ரெனக் கருத்து.

3. முன்னால் தேவாஸுரர்கள் பாற்கடலைக் கடைகை யில், அதிலிருந்து வேள்விகளுக்கு வேண்டிய நெய் முதலிய ஹவிஸ்ஸுக்க ளளிக்க வல்லதும், ஆகவே அமரர்களால் ஆரா திக்கப் பெற்றதுமான ஸுரபி என்னும் கபிலையுண்டாயிற்று; என்று ஸ்ரீ விஷ்ணுபுராணம்.

கூடியதுமான [1] **சர்மண்வதீ** என்னும் நதியை மேன்மை படுத்த மேலிருந்திறங்குவாயாக. கண்ணபிரானது நிறத்தைக் களவு புரிந்ததுபோல் தோற்றும் நீ, அவ்வாற்றின் வெள்ளத்திற்கருகில் நீரைப் பருகுவதற்குச் சாய்கையில், விமானத்திலேகும் வானவருக்கு, அந் நதி வெகு தூரத்திலிருப்பதால்—விசாலமாயிருந்தும்—வெகு குறுகியது போல் தோற்றுமாதலின், அவ் விண்ணவர், அவ்வாற்றைக் கண்டு, பூதேவிக்குப் பருத்த நீலமணியாலாகிய நடுநாயகத்தைப் பெற்ற ஒற்றைவட முத்துமாலையோவெனக் கருதப்போவது திண்ணம்.[2] 45 - 46.

---

1. முன்னொருகால், இரந்திதேவன் என்கிற மேன்மை பொருந்திய ஓர் மன்னவனது தேயத்திற் சில பசுக்கள் கானகங்களில் மேய்கையில், அவை கனகமயமான கதிரொளிவீசும் அங்கங்களைப் பெற்ற வேறு சில கபிலைகளைக் கண்டு ஆச்சரியமுற்று, 'அம்மணிமார்களே! இவ்வழகிய ரூபமும் கண்ணைப் பறிக்கும் காந்தியும் உங்களுக்கு எங்ஙனம் ஏற்பட்டது?' என வினவ, அத் தைவப் பசுக்கள், 'தார்மிகர்கள் எங்களை முறைப்படி வேள்விகளில் வதைசெய்ததாலுண்டான புண்ணியத்தின் பயனாக யாம் இவ்வாறானோம்.' என மறுமொழியளிக்க, அது கேட்டு, அவை அரசனிடம் வந்து, வேள்வியில் தம்மை வதைக்க வேண்டிக்கொள்ள, அவ் வேந்தனும் அங்ஙனமே செய்ததால், அப் பசுக்களின் சர்மங்களிலிருந்து பெருகிய இரத்தம் ஆறாகப் பெருக, அஃது, பிறகு சர்மண்வதீ என்கிற நதியாகப் போயிற்று; அவ் வரசனும் பசுக்களுடன் புண்ணிய லோகத்தையடைந்தான்; என மஹாபாரதத்தில் இக் கதையின் வரலாறு.

2. வெகு உயரத்தி லிருந்து பார்ப்பவருக்கு, பூமியில் நெடுக ஓடும் தெளிந்த ஜலத்தையுடைய அந் நதியானது பூதேவிக்கு ஒரு முத்துமாலை போலவும், அந் நதியில் நீரைப் பருக இறங்கிய கார்முகில் அதற்கு இந்திரநீலப்பதக்கம் போலவும் தோற்றும்; எனக் கருத்து.

"நீ அவ்வாற்றையும் கடந்து, கொடிபோன்ற புருவங்களின் பற்பல விலாஸங்களுடன்[1] கூடியனவும், இமைகளை விரித்துயர்த்துவதால் உயர்ந்தெழும் கறுப்பும் வெளுப்பும் கலந்த ஒளிகளுடன் விளங்குபவையும், ஆகவே, ஆகாயத்தி லெறிந்த குருக்கத்திப்பூக்களைப் பின்பற்றி மேலெழும் மதுகரங்களின் சீர்மையைக் கவர்ந்திழுப்பவையுமான **தசபுரத்து** நங்கையரது நேத்திரங்களின்[2] குதூஹலங்களுக்கு நினது மேனியைப் பாத்திரமாகச் செய்துகொண்டு செல்லக் கடவாய். 47.

" அப்பால், நீ, நிலத்திலோடும் நினது நிழலைக் கொண்டு, **பிரம்மாவர்த்த** மென்னும் தேயத்தை ஊடுருவிக் கடந்து,[3] பார்த்திவர் பலர் போர் புரிந்த குறிகளுடன் கூடிய அப் பெயர்பெற்ற **குருக்ஷேத்திரத்தை**யடையவேண்டும்; நீ தாமரைமலர்களின்மீது தாரை தாரையாக மாரியைச் சொரிவதுபோல், அவ்விடத்திற் காண்டீவமென்னும் வில்லேந்திய அர்ஜுனன்,

1. இதனால் 'புருவநெறிப்பு முதலிய விலாஸங்களறியாத......' என்று 16. வது பத்தியத்தில் வர்ணித்த நாடுகளிலுள்ள நங்கையரின் மாதிரிகளுக்கு மாறான சுபாவமானது நாகரிகஸ்திரீகளுக்கு விசேஷமென்பது குறிக்கப் படுகிறது.

2. கண்களில் சிலபாகம் வெளுத்தும், கருவிழி முதலிய சில பாகம் கறுத்தும் இருப்பதால், அவற்றின் காந்தி வானத்திற் கிளம்புவது, வெண்மையான குருக்கத்தி மலர்களைக் கரிவண்டுகள் பின்பற்றி யெழும்புவதுபோல் புலப்படும்; எனக் கருத்தாம்.

3. நிழல்மாத்திரம் பூமியில் ஓட, மேகம் அவ்விடத்தில் எங்கும் நிற்காமல் ஆகாயத்திலேயே செல்லவேண்டும்; எனப் பொருள்.

அரசர் முகங்களில் அதி தீக்ஷ்ணமான அம்புகளை அளவின்றிப் பொழிந்தனன். அழகிய குணமமைந்த அம்புதமே! பலபத்திரனவர், இரேவதீதேவியினது கண்களின் எதிரொளியைப் பெற்றதும், தன் மனமுவந்த சுவை பொருந்தியதுமான மதுவைப் பரிஹரித்து,[1] உறவினரிடமுள்ள உள்ளன்பினால் யாதொரு **ஸரஸ்வதீநதியின்** நீரைப் பருகினரோ, அந் நீரை நீயும் உட்கொண்டு, உள்ளத்தில் வெண்மையாகவும், வெளித்தோற்றத்தில் மட்டும் கறுநிறமாகவும் ஆகப்போகின்றனை.[2] 48 - 49.

"பின்னர், நீ, அங்கிருந்து, **கனகலம்** என்னும் குன்றத்தின்கண், இமயமலையினின்றும் இறங்கியதும், ஸகரபுத்திரர்கள் ஸ்வர்க்க மேறுவதற்கேற்ற ஸோபானபந்தியாயமைந்ததும், ஜன்னுமாமுனிவரின் மகளெனப் படுவதுமான **கங்காநதியை** நோக்கிப் போக வேண்டும்; அக் கங்கையோ, கௌரியின் முகத்தினிற்-

---

1. பலராமன், இரேவதீதேவியுடன்கூடவே மணிமய பாத்திரத்தில் மதுவை வைத்துக்கொண்டு அருந்துகையில், அவளது அழகிய கண்களின் பிரதிபிம்பம் அம் மதுவினுள் காணப்படுவதால், மத்யத்தின் இயற்கையான சுவையுடன் இன்னும் ஓர் இரஸவிசேஷம் இதனால் குறிப்பிடப்பட்டதாம்; பலராமனுக்கு மதுபானத்தில் மிகவும் விருப்ப முண்டென் பது பிரஸித்தம்.

2. ஸரஸ்வதீநதியின் நீரைப் பருகுவதால் பாவம் துலைந்து உள்ளம் தூய்மை (வெண்மை) யாவதும், தண்ணீரை யுட்கொண்டதால் மேகம் நீலநிறமாவதும் இயல்பு; பலராமன் வெளித் தோற்றத்திற்கு வெகு வெண்ணிறங்கொண்டிருந்தும், ஸுஹ்ருதவதத்தாலுண்டான பாவத்தைப் போக்கிக் கொள்ள மதுவைப் பரிஹரித்து விட்டு, ஸரஸ்வதீநீரையே பருகியது இதற்குச் சான்றாம்.

குடிலமாயுண்டான புருவநெறிப்பைக் கண்ணுற்று,
தனது நகைப்புக்கொப்பான நுரைத் திரள்களைக்
கொண்டு சிரிப்பதுபோல், சிவபெருமானது சிரத்தி
லிருக்கும் அம்புலியின் மீது அலைகளாகும் கரங்களை
வைத்து, அவ்வீசனது சடைமுடிகளைப் பற்றிக்கொண்
டதன்றோ![1] நீ, பின்புறம் ஆகாயத்தை நோக்கச் சற்
றுத் தலைகீழாகச் சாய்ந்து, ஒரு திக்கஜம் போல், ஒரு
வாறு அவ்வாற்றிற்குக் குறுக்காயிருந்து, களங்கமற்றப்
பளிங்குபோல் வெண்மையான அவ்வாற்றின் நீரை
அருந்துவதற்கு ஆலோசிப்பாயாயின், அந்த க்ஷணத்
தில் அவ் வெள்ளத்தின்மீது பரவும் நினது கறிய நிழ
லால் அந் நதியானது, யமுனையாற்றின் சேர்க்கையை

1. ஸகரன் என்கிற ஸூரியவம்சத்தரசன் அச்வமேத
யாகத்தில் விடுத்த குதிரையை இந்திரன் பிடித்துப் போய் பா
தாளலோகத்தில் ஓரிடத்திற் கட்டிவிட, அதைத்தேடிவரப்புறப்
பட்ட ஸகரனது 60,000 பிள்ளைகள் பூமியைத்தோண்டி (ஸகர
புத்திரர்கள் அப்பொழுது வெட்டியவிடங்கள் அகாதமான
ஸமுத்திரமாய் விட்டதால் கடல்களுக்கு ஸாகரம் எனப் பெயர்
வந்தது.) பாதாளலோகம் போய், கபிலமுனிவர் தவம் செய்யு
மிடத்திற் குதிரையைக் கட்டியிருக்கக் கண்டு, அதனால் அவரே
அதைப் பிடித்துவந்ததாகப் பிரமித்து அவரைத் துன்பப்படுத்த
முயல, அம் முனிவர், சினங்கொண்டு அவர்களைச் சாம்பலாகு
மாறுச் சபிக்க, அவர்களது பாவங்களைப் போக்கி அவருக்கு நற்
கதியுண்டாக்க முயன்ற அவ் வம்சத்தினரில், பகீரதனே விடா
முயற்சி செய்து, கங்கையைப் பூலோகத்திற்கு விண்ணுலகி
லிருந்து கொண்டுவருங்கால், அக் கங்கையை சிவன் சிரஸ்ஸால்
முதலில் தாங்கி, பின்னர் பூமியில் விட, அது வழியில் ஜன்னு
மஹர்ஷியின் யாகத்தைக் கலக்க, அவர் கோபத்துடன் நதி
யின் நீரனைத்தையும் பருகி, பகீரதனது வேண்டுகோளால் மறு
படியும் தனது காதால் அதை விட்டுவிட (இதனாலே ஜன்னு
மகள் என்று இதற்குப் பெயர்), பிறகு அந் நதி பாதாளம் போய்
ஸகரபுத்திரர்களது சாம்பல்களை நனைக்க, அவர்கள் அனைவரும்

மற்ருரிடத்திலும் பெற்றதுபோல் மனேஹரமாய்த் தோற்றும்.[1] அவ்விடத்திற் படுக்கும் கஸ்தூரிமிருகங்களது நாபிகளின் பரிமளத்தின் சேர்க்கையினுல் நறுமணங் கமழும் சிலைகளையுடையதும், பனித்திரளால் வெண்ணிறமானதும், அவ்வாற்றிற்கே பிறப்பிடமான இமகிரியை யடைந்து, அம் மாமலையின் சிரத்தின்கண் மார்க்கசிரமத்தை அகற்றிக்கொள்ள நீ ஸுகமாய் அமர்ந்திருக்கையில், முக்கண்ணனது வெண்ணிற விருஷபத்தின் கொம்பினுல் கொந்தி யெடுக்கப் பெற்று அம் முனையில் தங்கியிருக்கும் சேற்றுக்கொப்பான சாயலை ஏற்கப்போகின்றனை. ஆங்கு, வாயுவானது வெகு வேகமாய் வீசுங்கால் தேவதாருமரங்கள் ஒன்ருெடொன்றிழைய, அதனுலுண்டான காட்டுத்தீயானது, சவுரிமான்களின் வால்களிலுள்ள மயிர்த்திரளைத் தீப்பொரிகளால் பொசித்துக்கொண்டு அப் பர்வதத்தைப் பீடிக்குமாயின், அப்பொழுது நீ தாரை தாரையாக அளவிறந்த மழையைப் பொழிந்து அவ்

---

பிறகு நற்கதி யடைந்தனர் என்பது கதையின் வரலாறு; பாவங்களைப் போக்கி நற்கதியளிக்கவல்ல மஹிமை கங்கைக்கு இருப்பதாலும், அந் நதி விண்ணுலகிலிருந்து சிவனது சிரஸ்ஸிலும், அங்கிருந்து பூமியிலும், பூமியிலிருந்து பாதாளத்திலும் முறையே இறங்கிச் சென்றதால், அது ஸாகரான் பாதாளத்திலிருந்து விண்ணுலகேறுவதற்குத் தகுந்த படிக்கட்டுபோல் இருப்பதாகவும் வர்ணிக்கப்பட்டது; கங்காதேவியைச் சிவனுக்குப் பத்தினியாகவும் கூறுவது வழக்கம்; (கங்காதேவி சிவனது சிரஸ்ஸிலிருப்பதைக் கண்டு பார்வதி பொருமை கொள்ள, அது கண்டு கங்கை இன்னும் இறுமாப்பு மேலிட்டவளாய்த் தனது பெருமையைக் காட்டிப் பரிஹாஸம் செய்வது போலிருக்கிறது ; எனக் கருத்து.)

1. கங்கையும் யமுனையும் பிரயாகையென்னும் க்ஷேத்திரத்தில் ஒன்று சேறுவதால், இங்கு மற்ருரிடத்திலும் எனக் கூறப் பட்டது. கங்கை வெளுப்பு, யமுனை கறுப்பு.

வனலே அடியோடு அழித்துவிடவேண்டும்; ஏனெனில், உத்தமரது பொருட்கள், ஆபத்தடைந்தவரின் துன்பத்தை அகற்றுவதையே பயனாகப் பெற்றவை யன்றோ? மேலும் அம் மாமலேயில்,சரபமென்னும் கொடிய விலங்குகள்,—நீ வழியை விட்டு விலகியிருந்தும்—உன் றன்மீது, தமது சரீரம் சிதைவுறுவதற்கே,[1] சினங்கொண்டு விரைவாயெழும்பிப் பாயுங்களாயின்,நீ மேன்மேலும் ஆலங்கட்டிகளேக் கடுமையாகச் சொரிந்து அவற்றைச் சிதறடிப்பாயாக; பயனில்லாப் பணிகளேச் செய்ய முயன்ற எவர்தான் இறுதியிற் பரிபவத்திற்குப் பாத்திரமாகார்? அவ்விடத்திற் சிலேகளிற் செவ்வனே அமைந்திருப்பவையும்,ஸித்தர்களால் ஆராதிக்கப் படுபவையுமான சந்திரசேகரனது திருவடிகளின் பதிவுகளேப் பக்தியுடன் வணங்கிப் பலமுறை வலம்வரக் கடவாய்; ஆஸ்திகர்கள் அவற்றைத் தரிசிப்பாராயின், அவர் இம்மையிற் பாவமனைத்தையும் இழந்து, தமதுடலேத் துறந்த பின், பிரமதகணங்களின் அழிவிலாப் பதவியைப் பெறுவதற்குரியவராவர்.[2] அக்குன்றத்

1. மேகம் வெகு உயரத்தி லிருப்பதால், இதன்மேற் பாயும் சரபமிருகங்களுக்கு அவற்றின் சரீரம் சிதைவுறுவதை விட மற்றொரு பயன் கிடையாதெனக் கருத்து. [சரபம் என்பது எட்டுக் கால்களுடன் கூடியதும், யானையைக் கொல்லும் வலிமையுள்ளதுமான ஒரு கொடிய விலங்கு.]

2. ஹிமாலயத்தில், சிவன், தம்மைப்பற்றி அனுட்டிக்கப்படும் அகில கர்மங்களும் ஸித்தி யடைவதன் பொருட்டு, தமது சிறப்புற்ற சரணங்களே வெளிப்படையாகச் சிலேயிற் பதியச் செய்தனர் என்றும், ஸித்தி பெற விரும்புபவர் அவற்றைத் தரிசித்து, எவ்வுலகிலும் ஸஞ்சரிக்கத் தகும் தேஜோமயமான தேகத்தைப் பெருகின்றனர் என்றும் சம்பிரதாயத்திலுளது.

தினில், காற்று நிரம்பியத் துவாரங்களையுடைய மூங்கில்கள் இனிதாய் இசைந்தொலித்தவண்ணமிருக்க, இசைக் கருவிகளுக்கிசைந்தவாறு இராகங்களைப் பாடுந் திறமை பொருந்திய கின்னரஸ்திரீகள்[1] சிவ பெருமானின் த்ரிபுரவிஜயத்தைக் கானம் செய்து கொண்டிருக்க,[2] அக்காலை நினது கம்பீர முழக்கமும் குகைகளின் எதிரொலியுடன் மிருதங்கத்தொனி போலக் கிளம்புமாயின், பரமேச்வரனுக்கு அப்பொழுது ஸங்கீதப்ரஸங்கம் ஸகல அங்கங்களுடனுமமைந்து நன்கு நிறைவேறியதாகுமன்றோ? 50 - 56.

"இமகிரியின் சாரலில் வியப்புறத் தகும் அந்தந்த விசேஷங்களனைத்தையும் கண்ணுற்ற வண்ணம் கடந்தேகி, பரசுராமனது பெரும் புகழைப் பரப்புவதற்குப் பாதையாயுளதும், அன்னப்பறவைகள் புகுந்தேகுவதற்குப் பொருந்திய வாயிலாயிருப்பதுமான கிரௌஞ்ச பர்வதத்தின் யாதொரு துவாரமுண்டோ,[3] அதனுல்,

---

1. கின்னரஸ்திரீகள்=ஒரு வித தேவஜாதிஸ்திரீகள்.

2. மஹேசவரன், மூவுலகின் நன்மையை நாடி, பொன் வெள்ளி செம்பு என்னும் மூன்று உலோகங்களாலாகிய மூன்று பட்டணங்களில் வசித்த அஸுரரையும் அந் நகரங்களையும் நெற்றிக் கண்ணிலிருந்துண்டான நெருப்பினுல் நாசமாக்கிய வரலாற்றைப் பாட்டாக இயற்றி, கானம் செய்கின்றனர்; எனப் பொருள்.

3. முன்னுல் பரசுராமன், பரமசிவனிடம் தனுர்வேதத்தைக் கற்று வருங்கால், சுப்பிரம்மணியனுக்கும் தமக்கும் நேரிட்ட பெரும் போட்டியில், தமது பாணங்களை யெய்து, கிரௌஞ்சபர்வதத்திற் பெரியதோர் துவாரத்தை உண்டாக்கினுர் எனவும், அத் துவாரத்தின் வழியாய் ஹம்ஸங்கள் மானஸஸரஸ்ஸிற்கும் பாரததேயத்திற்கும் போக்கு வரத்து செய்கின்றன எனவும் கூறப் படுகிறது.

பலிசக்கிரவர்த்தியை அடக்க முயன்ற ஸ்ரீமஹாவிஷ்ணுவின் நீலநிறமாய் நீண்டு வளர்ந்த திருவடிபோல்[1] நீயும் உனதுடலைச் சீராகக் குறுக்காய் நீட்டிக்கொண்டு, உட்புகுந்து, மீண்டும் வெளிக் கிளம்பி வடதிசை நோக்கிச் செல்லவேண்டும். 57.

"நீ, கிரௌஞ்சத் துவாரத்தைக் கடந்து வானத்திலெழும்பிச் சென்று, இராவணனது புயங்களால் ஆட்டங்கொண்ட அடிவாரத்தின் ஸந்திபந்தங்களையுடையதும்,[2] தேவமாதுகளுக்குக் கண்ணாடியா யிருப்பதுமான **கைலாஸகிரிக்கு** அதிதியாகப் போகக் கடவாய்; அக் கைலையோ, தினந்தோறும் திரள் திரளாகக் குவிந்து வளர்ந்துருவமெடுத்த முக்கண்ணனது அட்டஹாஸம்[3] போன்றதாய், ஆம்பல்மலர்களுக்கேற்ப

---

1. முன்பு, திருமால் த்ரிவிக்ரமாவதாரமெடுத்து மூவுலகையும் அளக்க முயல்கையில், தமது திருவடியை மிகவும் நீட்டியது போல், மேகமும் தனதுடலை கிரௌஞ்சத் துவாரத்தின் அளவுக்குத் தகுந்தவாறு நீட்டிக்கொண்டு, உட்புகுந்தேகி மறுபடியும் வெளியில் வந்து இயற்கையுருவத்தை யடையுமாறு கூறுகிறான்.

2. இராவணன், தன் புயபலத்தினால் இறுமாப்புற்றவனாய், ஒருகால் கைலையைக் கைகளாலாட்டிப் பெயர்த்தெடுக்க, அப்பொழுது அம் மலையின் அதிர்ச்சியால் பார்வதீ முதலியவர் பயந்துவிட, அது கண்டு சிவபெருமான் தமது திருவடி விரலால் அம் மலையை அழுத்த, அதனால் அவனது புயங்களனைத்தும் நசுக்குண்டு, அவன் அனேக நாள் கூக்குரலிட்டுத் துதி செய்ய, ஈசன் மனம் பிரஸன்னமாய் அவனை விடுவித்தனரென்று புராணகதை.

3. அட்டஹாஸம் = பெருஞ் சிரிப்பு. [பிரளயகால முதலியவற்றில் சிவன் மிகவும் அதிகமாய்ச் சிரித்துக் கூத்தாடுவதாகப் பிரஸித்தி. சிரிப்பை வெளுப்பாக வர்ணிப்பது கவிகளின் முறை.]

வெண்ணிறங்கொண்டு மிகவுமுயர்வுற்ற அதன் கொடுமுடிகளால் ஆகாயத்தை யளாவி நிற்கின்றது. பிளவுற்ற நீலாஞ்ஜனச் சிலேயின் உட்புற நிறத்திற்கு நிகராகக் கறுநிறம் பெற்றுத் துலக்கங்கொண்ட நீ யானையினது தந்தத்தின் அப்பொழுதே அறுபட்ட முனைபோல் அதிகமாய் வெளுத்திருக்கும் அக் கைலை மலையின் சாரலைச் சார்ந்திருக்குங்கால், அப் பர்வதம், நீலவஸ்திரத்தைத் தோள்தனிலணிந்த பலபத்திரனுக் கொப்பான சீர்மையை யடைந்து,[1] வியப்புடன் இமைகளசையாமற் காணக் கூடிய காந்திவிசேஷத்தைப் பெறப்போகின்றதெனக் கருதுகின்றேன். பார்வதியானவள், தன் க்ரீடாபர்வதமான அக் கைலையிற் சிவபெருமானால், அரவமயமான கங்கணங்களைத் தனது கரத்திலிருந்து விலக்கிக்[2] கைலாகு கொடுக்கப் பெற்றவளாய்க் கால்நடையாகவே ஸஞ்சரிப்பளேயாயின், அப்பொழுது நீ முன் சென்று, நினதுடலுக்குள் தண்ணீர்த்திரளை அசையவிடாது இறுகச் செய்து கொண்டு,[3] உனது அங்கங்களை அடுக்கடுக்காக அணிவகுத்து, அப் பார்வதி மணிமயமான மலைத் தடத்தில்

---

1. பலராமன் நீலவஸ்திரம் தரித்ததாகக் கூறப்படுகிறது.

2. ஸர்ப்பமய ஆபரணங்களை விலக்குவது, பார்வதி பயமுறாமலிருப்பதின் பொருட்டே. [சிவன் ஸர்ப்பங்களைப் பூணாக அணிந்திருப்பதாகப் பிரஸித்தி.]

3. பாதங்களை வைத்து மிதித் தேறுகையில், உள்ளடங்கிய ஜலம் வெளியிற் சிதறியோடாமலிருக்க, இறுகச் செய்து கொள்ளவேண்டுமெனக் கூறுகிறான். [பார்வதி பாதங்களை ஸுகமாய் வைத்து எளிதில் ஏறக் கூடியவாறு, உடலை மெத்தையைப் போலவும் அடுக்கடுக்காகவும் ஆக்கிக்கொள்—என்று வல்லபதேவனுடைய வியாக்கியானப் படி பாடம்.]

ஏறுவதற்கேற்ற படிக்கட்டாகச் செய்திடுவாயாக. அக் கைலையங் கிரியில், தைவலோகத்து மங்கையர், தமது கங்கணங்களிலிழைத்துள்ள வைரமணிகளின் கூர்மையுள்ள முனைகளைக் கொண்டு உன்றனைத் தாக்குங்கால், நீ தண்ணீரை நன்குப் பொழிந்திடுவாயாதலின், அவர்கள் நீராடுமகத்தில் நின்றனை நீர்சொரியும் கருவியாக நிச்சயமாய் ஆக்கிக் கொள்வர்; எனது நண்பனே! அந் நங்கையர், வெயிலின் வெப்பத்தினால்[1] வருந்துங்கால், அவரது கைகளிற் சிக்கிய நீ, மீண்டும் அம் மாதுகளிடமிருந்து மீட்சி பெற முடியாமற்போயின், விளையாட்டிலாவலுறுமியல்பினரான அப் பெண்களைக் காதுகளுக்குக் கடுந்துன்பமளிக்கும் கர்ஜனைகளால் விரட்டி விடவேண்டும். எனது அன்பார்ந்த அம்புதமே! நீ, மானஸப் பொய்கையின், பொற்பங்கயங்களைப் பிறப்பிக்குந் தன்மையதான தண்ணீரைப் பருகியும், யதேச்சையாய் ஐராவதமென்னும் குஞ்ஜரத்திற்கு நொடிப் பொழுது முகத்திலணியும் ஆடையாகவிருந்தும், உன்றனால் உண்டாக்கப்படும் காற்றுகளால் கற்பகவிருக்ஷங்களின் பட்டுத்துகில்போன்ற தளிர்களைக் குலுங்கச் செய்தும், இன்னும் இவ்வாறு ஸரஸமான வெவ் வேறு விநோதச் செயல்களைச் செய்துகொண்டும், அம் மாமலையில் இஷ்டப்படி இன்ப மனுபவிப்பாயாக. 58 - 62.

---

1. ஸ்வர்க்கலோகஸுகத்தை அனுபவிப்பவர்களுக்கு வெயில் முதலியவற்றின் கொடுமை நேரிடவேண்டிய அவசியமில்லையானதால், 'வெயிலின் வெப்பம்' எனப் பொருள் கூறுவது தகாதெனவும், 'மன்மததாபத்தினால் வருந்துங்கால்' என்று கூறுவதே சான்றுமெனவும் பூர்ணஸரஸ்வதியின் வியாக்கியானம்.

"இச்சைக் கிசைந்தவண்ணம் எல்லாவிடத்திற்கும் ஏகுமியல்புடைய நீ, நாயகனது மடிபோன்ற அம்மலையின் மேற் றடத்திலிருப்பதும், சிறிது நழுவிய வெண்பட்டாடைக் கொப்பான கங்காநதியினால் சூழப் பெற்றதும், அப் பர்வதத்தின் ப்ரியதமையெனத் தகுந்ததுமான பட்டணத்தைக் கண்டு, அதை அளகாபுரி யென்றறியாம லிருக்கமாட்டாய் ;[1] அந் நகரமானது, மாரிகாலங்களில் மழை பொழியும் மேகத்திரளை மிகவுமுயரமான ஏழுப்பரிகையுள்ள மாளிகைகளாகும் முடிதனில் தாங்குவதால், அஃது, முத்துக் கோவைகளை முன்னெற்றிமயிர்களிலணிந்த மாதரசியைப் போல் விளங்கும்.[2] 63.

---

1. முன்பு 6 வது பத்தியத்திற் கூறியவாறு, மேகமானது மஹேந்திரனது மாற்றுருவங்க ளெடுக்கவல்ல அதிகாரபுருடனாயிருப்பதாலும், யதேச்சையாய் எங்கும் செல்லக் கூடிய திறமை வாய்ந்தது பற்றியும், இதற்குமுன் கூட, அஃது அளகாபுரியை நன்கறிந்திருக்கும் என்கிற கருத்துடன் இங்ஙனம் கூறினன்.

2. 'மார்க்கமனைத்தையும் முதலில் நான் சொல்லக் கேள்' என்று முற் கூறியபடி, மார்க்கமனைத்தும் மொழியப்பெற்றதாதலால் இத்துடன் முதல் ஆச்வாஸத்தை முடித்து, 'நாயகனின் மடியில் நன்கலங்கரித்த ப்ரியதமையைப் போல்' என்று அளகாபுரியை வர்ணிக்கும் பாவனையாக, யக்ஷனுக்கு அவனது மனைவியுடன் இறுதியிற் சேர்க்கையுண்டாய், அவன் இன்புறப் போகும் மங்களகரமான விஷயம் காளிதாஸமஹாகவியினால் ஸூசிப்பிக்கப்பட்ட தென்றறிக.

ஏறுவதற்கேற்ற படிக்கட்டாகச் செய்திடுவாயாக. அக் கைலையங் கிரியில், தைவலோகத்து மங்கையர், தமது கங்கணங்களிலிழைத்துள்ள வைரமணிகளின் கூர்மை யுரான முனைகளைக் கொண்டு உன்றனைத் தாக்குங்கால், நீ தண்ணீரை நன்குப் பொழிந்திடுவாயாதலின், அவர்கள் நீராடுமகத்தில் நின்றனை நீர்சொரியும் கருவியாக நிச்சய மாய் ஆக்கிக் கொள்வர்; எனது நண்பனே! அந் நங் கையர், வெயிலின் வெப்பத்தினால்[1] வருந்துங்கால், அவரது கைகளிற் சிக்கிய நீ, மீண்டும் அம் மாதுகளிட மிருந்து மீட்சி பெற முடியாமற்போயின், விளையாட்டி லாவலுறுமியல்பினரான அப் பெண்களைக் காதுகளுக் குக் கடுந்துன்பமளிக்கும் கர்ஜனைகளால் விரட்டி விட வேண்டும். எனது அன்பார்ந்த அம்புதமே! நீ, மான ஸப் பொய்கையின், பொற்பங்கயங்களைப் பிறப்பிக்குந் தன்மையதான தண்ணீரைப் பருகியும், யதேச்சையாய் ஐராவதமென்னும் குஞ்ஜரத்திற்கு நொடிப் பொழுது முகத்திலணியும் ஆடையாகவிருந்தும், உன்றனால் உண் டாக்கப்படும் காற்றுகளால் கற்பகவிருக்ஷங்களின் பட் டுத்துகில்போன்ற தளிர்களைக் குலுங்கச் செய்தும், இன் னும் இவ்வாறு ஸரஸமான வெவ் வேறு விநோதச் செயல்களைச் செய்துகொண்டும், அம் மாமலையில் இஷ் டப்படி இன்ப மனுபவிப்பாயாக. 58 - 62.

---

1. ஸ்வர்க்கலோகஸுகத்தை அனுபவிப்பவர்களுக்கு வெயில் முதலியவற்றின் கொடுமை நேரிடவேண்டிய அவசிய மில்லையானதால், 'வெயிலின் வெப்பம்' எனப் பொருள் கூறு வது தகாதெனவும், 'மன்மததாபத்தினால் வருந்துங்கால்' என்று கூறுவதே சான்றுமெனவும் பூர்ணஸரஸ்வதியின் வியாக்கியானம்.

"இச்சைக் கிசைந்தவண்ணம் எல்லாவிடத்திற் கும் ஏகுமியல்புடைய நீ, நாயகனது மடிபோன்ற அம் மலையின் மேற் றடத்திலிருப்பதும், சிறிது நழுவிய வெண்பட்டாடைக் கொப்பான கங்காநதியினால் சூழப் பெற்றதும், அப் பர்வதத்தின் ப்ரியதமையெனத் தகுந்ததுமான பட்டணத்தைக் கண்டு, அதை அளகாபுரி யென்றறியாம லிருக்கமாட்டாய்; [1] அந் நகர மானது, மாரிகாலங்களில் மழை பொழியும் மேகத் திரளை மிகவுமுயரமான ஏழுப்பரிகையுள்ள மாளிகைக ளாகும் முடிதனில் தாங்குவதால், அஃது, முத்துக் கோவைகளை முன்னெற்றிமயிர்களிலணிந்த மாதரசி யைப் போல் விளங்கும். [2] 63.

---

1. முன்பு 6 வது பத்தியத்திற் கூறியவாறு, மேகமானது மஹேந்திரனது மாற்றுருவங்க ளெடுக்கவல்ல அதிகாரபுருட னாயிருப்பதாலும், யதேச்சையாய் எங்கும் செல்லக் கூடிய திற மை வாய்ந்தது பற்றியும், இதற்குமுன் கூட, அஃது அளகாபுரி யை நன்கறிந்திருக்கும் என்கிற கருத்துடன் இங்ஙனம் கூறி னன்.

2. 'மார்க்கமனைத்தையும் முதலில் நான் சொல்லக் கேள்' என்று முற் கூறியபடி, மார்க்கமனைத்தும் மொழியப்பெற்றதாத லால் இத்துடன் முதல் ஆச்வாஸத்தை முடித்து, 'நாயகனின் மடியில் நன்கலங்கரித்த ப்ரியதமையைப் போல்' என்று அளகாபுரியை வர்ணிக்கும் பாவனையாக, யக்ஷனுக்கு அவனது மனைவியுடன் இறுதியிற் சேர்க்கையுண்டாய், அவன் இன்ப முறப் போகும் மங்களகரமான விஷயம் காளிதாஸமஹாகவியினால் ஸூசிப்பிக்கப்பட்டதென்றறிக.

ஸ்ரீ:

# இரண்டாம் ஆச்வாஸம்

" அம் மாநகரத்தின்கண் மிக வடிவழகு வாய்ந்த மங்கையரையுடையனவும், சித்திரங்களாற் சிறப்புற்றனவும், ஸங்கீதப் பிரஸங்கத்தில் அடிக்கப்படும் மிருதங்கத் தொனிகளைப் பெற்றவையும், மணிமயமான நிலங்களுடன் கூடியனவும், ஆகாயத்தை யளாவிய முனைகளையுடையவையுமான மாடிமாளிகைகள்,—மின்னற்கொடிகளைப் பெற்றதும், இந்திரதனுஸ்ஸுடன் கூடியதும், செவிகளுக் கின்பமாக கம்பீரமாய் முழங்குவதும், உடலுக்குள் தளதளப்பான தண்ணீரைத் தாங்கியதும், மிகவும் உயரத்திலிருப்பதுமான நின்றனக்கு முறையே அந்தந்த விசேஷங்களால் நிகராகக் கூடியன.[1] அவ்வளகாபுரியிலுள்ள அங்கனைகள், கரந்தனில் விநோதமாய்க் கமலமலரையும், முன்னெற்றி மயிர்களிற் குருக்கத்திப் பூவையும், சீரான முகத்தினில் வெள்ளிலோத்திமலர்ப் பொடியாலாகிய வெண்ணிறத்தையும், மயிர்முடியில் மாசற்ற மருதோன்றி மலரையும், காதுகளிற் கோமளமான காட்டுவாகைப்

---

1. மங்கையர் மின்னற் கொடிகளுக்கும், சித்திரங்கள் இந்திரதனுஸ்ஸுக்கும், மிருதங்கத் தொனிகள் இடி முழக்கங்களுக்கும், மணிமய நிலங்கள் தளதளப்பான தண்ணீருக்கும், உன்னதம் உயர்வுக்கும் முறையே தகுந்த உவமைகளாம்.

பூவையும், தலைமயிரின் வகுடுதனில் நினது வரவால் விகஸித்த கடப்பம்பூவையும் அனவரதமும் அணிந்திருப்பர்.[1] ஆங்கு, யக்ஷர்கள், ஒளிவீசும் தாரகை முதலியவற்றின் பிரதிபிம்பங்களாகும் புஷ்பங்களால்[2] அலங்கரிக்கப் பெற்றப் படிகமணிமயமான உப்பரிகைகளின்கண் பெண்மணிகளுடன் ஏறிச் சென்று,—நீ கம்பீரமாய் முழங்குவதுபோல் மெல்லென ஒலிக்குமாறு மிருதங்கங்கள் அடிக்கப் படுங்கால்—கற்பகவிருக்ஷங்களில் உற்பத்தியாய் மிகவுமின்ப மளிக்கவல்லதான மதுவை[3] ஆதரவுடன் அருந்துகின்றனர். அந் நகரத்தில், கோவைப்பழம் போன்ற உதடுகளையுடைய ஸௌந்தரிகளின் கணவர், அவரது

---

1. சரத்ருதுவில் தாமரையும், ஹேமந்தருதுவில் குருக்கத்தியும், சிசிரருதுவில் வெள்ளிலோத்தியும், வஸந்தருதுவில் மருதோன்றியும், கிரீஷ்மருதுவில் காட்டுவாகையும், வருஷருதுவில் கடம்பும் முறையே மலருமாதலால், அந் நகரத்தில் ஆறு ருதுக்களில் உண்டாகும் புஷ்பங்களும் மாறுதலின்றி புஷ்பிக்கின்றனவாம்; அஃது தைவலோகத்தின் மஹிமையெனக் கூற வேண்டும்.

2. இதனால் அந்த மாளிகைகள் நக்ஷத்திரமண்டலங்களை அளாவி யிருப்பதாகவும், மணிமயமான மேற்றடங்கள் மிக நிர்மலமா யிருப்பதாகவும் கூறப்பட்டதா யறிக; அருகிலிருக்கும் பொருள் பிரதிபிம்பத்தில் அருகிலிருப்பதாகவும், தூரத்திலிருப்பது அங்ஙனமே தூரத்திலும் காணப்படுவதியல்பு. நக்ஷத்திரங்கள் வெகு ஸமீபத்திலிருப்பதாலேயே அவற்றின் பிரதிபிம்பங்கள் மாடிகளின்மீது மணித்தடங்களில் மலர்களிறைந்தது போற் புலப்படுகின்றன.

3. கற்பகவிருக்ஷத்தின் புஷ்பரஸங்களிலிருந்து இறக்கப்பெற்றதும், மிகவுமின்ப மளிக்கவல்லதுமான மதுவை—என்றும் கூறலாம். [வாருணீ யென்னும் மத்யமானது பிருந்தா

இடையிலிருக்கும் பட்டாடையின் முடியவிழ்ந்து நழு வுமாறு, கரங்கள் நடுக்கமுறக் காதலுடன் அச் சீலையை இழுக்குங்கால், அவ் வனிதைகள், வெட்கத்தினல் மதி மயங்கியவராய், சுடரொளி வீசியவண்ணம் தமது முன் புறத்தில் விளங்கும் மணிமயமான தீபங்களை அவிப் பதற்காக அவற்றின்மீது கந்தப்பொடிகளை வீணிற் பிடி பிடியாய் வாரியிறைப்பதியல்பு.[1] வாயுவினல் அலைத்து ஏவப்பெற்ற நினது இனத்தைச் சார்ந்த நீர்கொண்ட மேகங்கள், அம் மாநகரத்து ஏழுப்பரிகைகளுள்ள மாளி கைகளது மேல்மாடங்களின் சித்திரங்களை நூதன நீர்த்துளிகளால் சீர்குலையச் செய்து, அதனல் அந்த க்ஷணமே அச்சமுற்றவை போல்—ஸுகந்த தூபங்க ளிடுங்கால் அவற்றிலிருந்து கிளம்பும் தூமங்களோவெ னத் தோற்றுமாறு—மாளிகைகளது சாளரங்களி

---

வன மென்கிற உத்தியானவனத்திலுள்ள கற்பகவிருக்ஷத்தின் பொந்துதனிலுளது—என்கிற ஸ்ரீவிஷ்ணுபுராணவாக்கியத் தைப் பிரமாணமாகக்கொண்டால் மேலே கூறிய பொருளே ‘மது கல்பவ்ருக்ஷப்ரஸூதம்’ என்பதற்குப் பொருந்தியதாம்.] இங்கு கூறிய மதுவுக்கு, ரதிபலம் என்கிற காமோத்தீபகமான ஒருவகை மத்யமெனப் பொருளென்று மல்லிநாதன். அது பனஞ்சார், சர்க்கரை, நெல்லிக்கனி, கருப்பஞ்சார், குங்கிலியம் முதலியவற்ருல் பக்குவம் செய்யப்படும்—என்று மதிரார்ணவம் என்கிற நூலிற் கூறப்படுகிறது.

1. பேரொளி வீசும் இரத்தினங்களாலான தீபங்களின் மீது கந்தப்பொடியை யிறைத்தாலும், அது மற்ற அக்கினியா லான விளக்கைப் போல் அவிந்துவிடாதாகையால், பெண்கள் வெட்கமதிகரித்து மதிமயங்கி, அதனல் செய்த வீண்செயலா மெனக் கருத்து.

னூடே சிதறுண்டு வெளி வந்து வீழ்ந்தோடுகின்றன.[1] அந் நகரத்து வீடுகளில், நூற் குஞ்சங்களி னூசலாடு மாறு அமைத்திருக்கும் சந்திரகாந்தமணிகள், நள்ளிரவில்—பின்றனல் மறைக்கப்படாமல் மாசற்று விளங்கும் மதியின் கதிரொளிகள் தாக்குவதால்—நீர்த்துளிகளை நன்ருகப் பெருக்கி,[2] அன்பார்ந்த கணவருது புயங்களால் தழுவி விடப் பெற்ற மங்கையருக்கு அக் காலே அங்கங்களிலுதித்த ஆயாஸத்தை அகற்றிவிடுகின்றன.[3] காமனவன், குபேரனுக்குத் தோழனை பரமசிவன் அப் பட்டணத்திற் பிரத்யக்ஷமாய் வஸிப்பதைக் கருதி, வண்டுகளின் வரிசையை ஞாணுகக் கொண்ட கோதண்டத்தைப் பெரும்பாலும் பயத்தினல் புயத்தி லேந்துவதில்லை;[4] என்ருலும், புருவ

1. இங்கு மேகங்களின் செயலானது, சோரநாயகர் அந்தப் புரத்தில் நடமாடும் ஓர் தூதனது உதவியால் மாளிகையின் இரஹஸ்யமான இடத்திற் சென்று, அங்குள்ள ஸ்திரீகளைக் கற்பழித்து, உடனே வேறு வேஷந்தரித்து, அஞ்சியஞ்சிக் குறுகிய வழிகளால் வெளிவந்து ஓடுவதற்கு ஒப்பிடப் படுவதாக உட்கருத்து.

2. சந்திரகாந்தக் கற்கள், சந்திரகிரணங்களின் பரிசத்தால் கசிந்து நீரைப் பெருக்குவதியல்பாம்.

3. சரங்கள் பட்டு வாடிய மல்லிகை முதலிய மலர்களைக் குளிர்ந்த நீருற்றிச் சீர் படுத்துவது போல், இங்குஸ்திரீகளுக்கு சீதோபசாரம் என்று அபிப்பிராயம்.

4. ஒருகால் மஹேச்வரன், இமயமலையில் மஹாதவம் புரிகையில், பார்வதியானவள் அவருக்கு உபசாரம் செய்து கொண்டு பக்கத்திலிருக்க, அப்பொழுது மஹேந்திரனல் ஏவப்பட்ட மன்மதன், ஸம்மோஹநாஸ்திரங்கொண்டு, அவளிடம் கா

நெறிப்புடன் கூடிய கண்களாகும் அம்புகளால், காமிகளை இலக்கு வைத்துக் குறி தவருமல் நற்பயன் விளையுமாறு நுட்பமாய்த் தாக்குவதில் அதிக சாதுரியம் வாய்ந்த அங்கனைகளின் அரிய விலாஸங்க ளாற்றனே, அங்கு, அவ்வனங்கனது முயற்சி நன்கு நிறைவேற்றப் படுகின்றது. 1 - 7.

"அவ்வளகையின்கண், நினது இந்திரதனுஸ்ஸைப் போல் பலவர்ணங்களுடன் பளபளத்து அழகாய் உயர்ந்து நிற்கும் வாயிற்படியினுல் வெகு தூரத்திலிருந்தே காணக் கூடியதாய், குபேரனது கிருஹத்திற்கு வட புறத்தில் எமது மாளிகை அமைந்துளது; அவ்வகத்தைச் சார்ந்த சிங்காரவனத்தினில் எனது காதலியினுல் கருத்துடன் வளர்க்கப் பெற்றதும், கரத்தினுல் தாவிப் பறிக்கக் கூடிய பூங்கொத்துகளின் பாரத்தினுல் செழித்துத் தழைந்துமிருக்கும் இளங்

---

தனுண்டாகுமாறு, சிவபெருமானைத் தாக்க முயல, யோகத்திலிருக்கும் அவர் மனது திடீரென்று பார்வதியினிடம் மோஹங்கொண்டு விகாரமடைய, உடனே அந் நிலைமைக்குக் காரணமென்னென்று ஆச்சரியத்துடன் ஆலோசித்து எதிரில் நோக்க, காமன் வில்லுங் கையுமாய் ஸந்நத்தமா யிருப்பதைக் கண்டதும், கடுஞ்சினங்கொண்டு, மூன்றுவதான நெற்றிக்கண்ணைத்திறந்து அதிலிருந்துண்டான காடாக்கினியினுல் அவனைச் சாம்பலாக்கி, பின்னர் அவனது மனைவியான இரதிதேவியின் கருணைபுரியத் தகும் வேண்டுகோளின்மேல் மனமிரங்கி, மற்றொரு மனோஹர மேனியைத் தந்து அவனைப் பிரத்யும்னன் என்பவனுகச் செய்தனராம். [மன்மதனுக்குக் கரும்பை வில்லாகவும், வண்டுகளின் வரிசையை அதன் ஞாணகவும், ஐந்துவித புஷ்பங்களை அம்புகளாகவும் கூறுவது வழக்கம்.]

கற்பகவிருக்ஷமொன்று எமது அரும் புதல்வனைப் போல் விளங்குகின்றது. அம் மாளிகைக்கருகில் மரகதக் கற்களிழைத்துக் கட்டிய ஸோபானமார்க்கத்தைப் பெற்றதும், வைடூர்யமயமான வெகு நீண்ட நாளங்களையுடைய பொற்றாமரை மொட்டுகளால் நிரம்பியதுமான நடவாபியும் ஒன்றுண்டு; [1]அந் நீர்தனில் சிறிதும் சிந்தையின்றி நிலைத்துவாழும் அன்னப்பறவைகள், நின்றனைப் பார்த்தபின் கூட, மானஸப் பொய்கை மிகவும் அருகிலிருந்தும், அதை மனத்தினும் நினைக்கமாட்டா. [2] அவ் வாபியின் கரையில், வெகு மனோஹரமான இந்திரநீலச் சிலைகளாலாக்கிய சிகரங்களை யுடையதும், சுற்றிலும் வளர்ந்திருக்கும் பொன்மயமான வாழை மரங்களால் கண்களுக்குக்களிப் பூட்டுவதுமான ஓர் கிரீடாபர்வதமுண்டு; நண்பனே! அஃது எனது இல்லாளுக்கு மிகவும் இஷ்டமானதென் றெண்ணி, ஓரங்களில் மின்னி யொளிக்கும் மின்னற் கொடிகளுடன் கூடிய நின்றனை ஆவலதிகரித்து அச்சமுறும் மனத்துடன் நன்றாகக்கண்ணோக்கும் என்றனக்கு

1. அந் நீர்தனில் என்பதற்குப் பதிலாக 'அதன் கரையில்' என்று பூர்ணஸரஸ்வதியின் பாடப்படி அர்த்தமுரைக்க வேண்டும்.

2. ஹம்ஸங்கள் நிர்மலமான நீரில் விருப்பமுள்ளன வாதலால், மேகம் மழையைப் பொழிந்து நீரைக் கலக்கிவிடுகின்றன வென்று நினைத்து, மேகங்களைக் கண்டதும் அவை அஞ்சி மானஸஸரஸ்ஸிற்குப் போய்விடும்; மானஸப்பொய்கை மிகவும் அகாதமான தேவஸரஸ்ஸானதாலும், அங்கு மேகங்களினுலுண்டாகும் கஷ்டம் கிடையாமையாலும் அவ்விடம் போகின்றன. அந் நடவாபியில் சேறு முதலியதில்லாமல் அஃது ஆழமாயிருப்பதால் நீர் கலங்காதென்னும் நிச்சயத்தினுல் மானஸத்தில் அவற்றிற்கு விருப்பமில்லையாம்.

அம்மலையே மேன்மேலும் மனத்தினில் நினைவுக்கு வரு கின்றது.[1] அக் கிரீடாசைலத்தின்கண், இளந்தளிர் களால் குலுங்கி விளங்கும் ஓர் இரத்தாசோகமரமும், மனதைக் கவரு மழகு வாய்ந்த மகிழமர மொன்றும், வாடாக்குறிஞ்சிகளால் வேலியிடப்பெற்ற குருக் கத்திக் கொடிகளாலாகிய மண்டபத்திற்கு மிகவும் அருகிலிருக்கின்றன; அவற்றுள் முதலிற் கூறிய மர மானது நினது தோழியின் இடது பாத பரிசத்தையும், மற்றோர் மரம் அவள் வாயினுல் கொப்புளிக்கும் மது வையும் தோஹதமென்னும் [2] வியாஜத்தைக்கொண்டு, என்றனைப் போலவே விரும்பு மியல்புடையன. அவ் விரு மரங்களுக்கு மிடையில், படிகமயமான பலகை யுடன்கூடிய பக்ஷிநிற்கும் பொற்றடியொன்று, இள மூங்கிற் குருத்துகளுக்கொப்பான காந்தி பொருந்திய மரகதமணிகளால் அடியில் அமைக்கப்பெற்ற மேடை யின்மீது நிற்கின்றது; அந்திப்பொழுதில் அத் தடியின்

1. மிக நீலமான மலையின் அடிவாரத்தில் பொன்மய மான வாழைமரங்கள், கருத்த மேகத்தினிடையில் மின்னொளி களைப் போல் தோற்றும் என்பதாம்; அம்மலையும் தன் மனைவிக்கு விருப்பமானதுபற்றி, அம் மலையைப்போலவே இருக்கும் இம் மேகத்தைக் கண்டு மனமச்சமுற்று மிசச் சவலையுண்டாயிற் றும். [தாம் பழகியனுபவித்த பொருட்களுக் கீடானவற்றைக் காண்பதாலும் கேட்பதாலும் கூறுவதாலும் ஆனந்தத்துடன் அச்ச முறுவது இயல்பு; என்று இரஸாகரமென்னும் நூல்.]

2. தோஹதம் = மர முதலியவை அசாலங்களிலும், அல் லது உற்ற காலங்களிலும் விசேஷமாய்ப் புஷ்பித்துப் பழுக் கும்வண்ணம் செய்யப்படும் ஓர் ஸம்ஸ்காரம். [யௌவன ஸ்திரீகளின் இடதுகால் பட்டால் அசோகமரங்களும், அவர் வாயால் கொப்பளிக்கும் மத்யத்தினுல் மகிழமரங்களும் தளிர்த்து மலருமென்று கூறுகின்றனர்.]

மீது நிற்கும் நினது மித்திரனின் மயிலானது, என் காதலியினால், கங்கணங்கள் மனோஹரமாகக் குலுங்கி யொலிக்கக் கரதாளங்கொட்டி நாட்டியமாட்டிவைக்கப் படுவதுண்டு. அருங் குணமமைந்த அம்புதமே ! நீ இக் குறிகளனைத்தையும் மனத்தினில் வைத்துக்கொண்டு, வாயிற்படிக்கு இரு புறமும் வரையப்பெற்ற [1] சங்க பத்மங்களென்னும் நிதிகளின் உருவங்களையும் உற்று நோக்கி, எமது மாளிகை அதுவென்று அறிந்துகொள் வாயாக ; அவ்வகம் இப்பொழுது எனது பிரிவினால் ஒளி மழுங்கிப் பாழடைந்திருப்பதுபோற் காணுமென் பது திண்ணம் ; ஆம், கமலமலர், கதிரவன் மறைந்தால், அதற்கியற்கையான சீர்மையை விளக்கமாட்டா தன்றோ ? 8—13.

" அப்பா ! வேகமா யெளிதில் எழும்பக் கூடிய வண்ணம் சிறு யானையைப் போல் உனதுடலைச் சுருக் கிக்கொண்டு, முற் கூறிய கிரீடாபர்வதத்தின் அழகிய அடிவாரத்தினிற் சென்றமர்ந்திருந்து, மின்மினிப் பூச்சி களின் பந்திகளைப் போல் [2]மிகச் சிறியதாய் ஒளிவீசி மின்னும் மின்னலாகும் கண்களையமைத்துக்கொண்டு,

1. சங்கத்தையும், பத்மத்தையும் (தாமரை) முடிதனி லேந்திய—அப் பெயர்கொண்ட நிதிகளுக்கு அதிஷ்டான தேவதைகளின் உருவங்கள், அல்லது சங்கம் பத்மம் என் கிற வஸ்துக்களின் உருவங்கள்.

2. பேரொளிவீசுமாறு மின்னலுண்டானால், தனது மனைவியின் கண்கள் கூச்சங்கொண்டு கஷ்டப்படுவதுடன் மேகத்தைப் பார்ப்பதற்கே முடியாமற் போய்விடு மெனக் கருத்து.

அவற்றின் பார்வை அவ்வகத்தினுள் விழுமாறு செலுத்தக் கடவாய். 14.

" அப்பொழுது அம் மாளிகையினுள் மிக மனோஹரமான மாதரசி யொருத்தி இருக்கக் காண்பாய்; அவளோ, மெல்லிய மேனியாள்; சற்றுக் கறுநிறமான வள்; கூர்மையாக மணிமணியாயமைந்த பற்களுடன் கூடியவள்; கனிந்த கோவைப்பழம் போன்ற உதடுகளுடையவள்; மெலிந்த இடையையும் ஆழ்ந்த நாபியையும் பெற்றவள்; மிரண்ட மான்பேடுபோல் கண்ணோக்கும் கட்டழகு வாய்ந்தவள்; கடிதடங்களின் பாரத்தினால் மெல்லெனச் செல்லுபவள்; கொங்கைகளிரண்டாலும் சிறிது வணங்கிய அங்கங்களையுடையவள்; சுருங்கச் சொல்லில், அவள், நங்கையர்விஷயமாய் நான்முகன் செய்த முதற்படைப்பெனத் தகுந்தவள். இப்பொழுது, மனநோயுற்று மிதமாகப் பேசும் அம் மங்கையர்க்கரசியே எனது இரண்டாவ துயிரென்றறிவீராக; அவள், எப்பொழுதும் உடனிருக்கும் நாயகனை நான் நெடுந்தூரத்திலிருக்கின்றமையால், கூட இருக்கும் ஆண்பறவையை விட்டுப் பிரிந்த சக்கிரவாகப் பேடுபோல், இப்பொழுது தனித்திருக்கின்றனள்; அச் சிறு பெண்மணியானவள், அடுத்தடுத்தாவலதிகரிக்கின்றமையால், அளவின்றி வளர்வதுபோல் தோற்றும் இப் பிரிவுநாட்கள் கழிந்துவருங்கால், பனிப்பருவத்திற் பாழடைந்த பங்கஜப் பொய்கையைப் போல் உருமாறியிருப்பளெனக் கருதுகின்றேன்.[1] ஆம்; அபரி

1. ' ஹிமஹததளிநீவ நஷ்டசோபா வ்யஸநபரம்பரயா விஷீட்யமாநா । ஸஹசரரஹிதேவ சக்ரவாகீ ஜநகஸுதா க்ருப

மிதமான அழுகையினால் வீங்கிய நேத்திரங்களையுடையதும், சுடச் சுடப் பெருமூச்செறிவதால் [1]வேற்று நிறமுற்ற உதடுகளைப் பெற்றதும், முன்னெற்றிமயிர்கள் அலைந்தாடுவதால் மறைக்கப்பெற்ற சில பாகத்தையுடையதும், அவளது கரதலத்தின் மீது அமர்ந்திருப்பதுமான அவள் முகமானது, நின்றனால் சிறிது மறைக்கப்பெற்று மழுக்கங் கொண்ட காந்தியையுடைய மதியைப்போல், [2]மனமிரங்கக் கூடிய நிலைமையை நிச்சயமாய் அடைந்திருக்கும். 15—17.

"நற்குணசாலியான நண்பனே! நீ அவ்விடத்தில் என் காதலியைக் காணும் பொழுது, அவள், தைவங்களுக்குப் பணிவுடன் பூஜை செய்வதிற் பெரு முயற்சி கொண்டவளாகவேனும், பிரிவாற்றாமையினால் இங்ஙனம் எனது மேனி மிக மெலிவுற்றிருக்குமென மனவூக்கத்தினால் ஒருவாறுணர்ந்து இந் நிலைமையிலிருக்கும் எனதுடலுக்கு நிகரான வடிவத்தை வரைந்தவாறு

---

ணாம் தசாம் ப்ரபந்நா'—ஜானகியானவள், பரபல மனத்துயரங்களால் பீடிக்கப்பட்டு, பனியினால் பாழான பங்கயப் பொய்கைபோல் ஒளி யிழந்தும், ஆண்பறவையை விட்டுப் பிரிந்துப் பரிதவிக்கும் சக்கிரவாகப் பேடுபோலவும் மிகவும் எளிய நிலைமையைப் பெற்றிருக்கின்றனள்; என்கிற ஸ்ரீமத்ராமாயணத்திற் கூறிய வர்ணனையை இக் கவியும் ஆதரவுடன் அனுஸரிக்கின்றனன்.

1. மிகுதியான மனத் துயரத்தினால் பெருமூச்சானது வெப்பங்கொண்டு வெளிவருவதால், அவ் வேக்காட்டினால் உதடுகள் வேற்று நிறமுற்றனவாம்.

2. இங்கு மயிர்களுக்கு மேகமும், அவற்றால் சிறிது மறைக்கப்பெற்ற முகத்திற்கு மேகத்தால் சற்று மறைந்த சந்திரனும் முறையே உபமானங்களாம்.

யினும், கூட்டிலிருக்கும் இனிதாகப் பேசுந் திறமை பொருந்திய பெண்கிளியை நோக்கி 'அழகிய அரும் பறவையே! நீ எமது நாயகனது மனதுக்கின்பமாயிருந் தனையே; நீ மனத்திலேனும் அவரை நினைக்கின் றனையோ!' என்று வினவியவண்ணமாயாகிலும், எனது பெயரைக் குறியாகக் கொண்டதும் பற்பல பதங்களா லிணைக்கப்பெற்றதுமான பாட்டொன்றைப் பாடவிரும் பியவளாய்—அழுக்கடைந்த ஆடையையுடைய தன் மடிதனில் வைத்திருக்கும் வீணையின்மீது கண்ணீர் வீழ்ந்து அது நனைய, அதன் நரம்புகளை வெகு கஷ் டத்துடன் துடைத்துத்—தான் பாடமுயன்ற இன் னிசைமுறையைத் தானே அடிக்கடி மறந்து மன வருத்தமுற்றவளாகவேனும், வரையறுத் தேற்படுத் திய விரஹநாட்கள் முடிவதற்கு மிகுந்துள்ள மாதங் களை எண்ணுவதற்கு வாயிற்படியிலிட்ட பூக்களை யெடு த்துப் பூமியில் வரிசையாய் வைத்தவாறுகிலும், என்னு டன் கூடுவதாக இருதயத்தினுள் தியானிக்க முயன்று இன்பமனுபவித்துக் கொண்டாயினும் இருக்கப்போ கின்றனள்;[1] ஏனெனில், பெரும்பாலும் இவையே, மனதுக்கினிய மணாளரை விட்டுப் பிரிந்த மங்கை யருக்குப் பொழுதுபோக்கப் பொருந்திய செயல்க ளாம். இவ் விரஹவேதனையானது, இரவில் விநோதச்

---

1. கணவன் மனவருத்தங் கொண்டால் வருத்தமுற்றும், களித்திருக்கையிற் களிப்புற்றும், தேசாந்தரம் சென்றிருக்கை யில் மலினவஸ்திரந் தரித்து மெலிந்த மேனியைப் பெற்றும், உயிரிழக்கையில் உயிரைத் துறந்தும், இவ்வாறு எந் நிலைமையி லும் கணவனைப் பின்பற்றுபவளே பதிவிரதை யெனப் படுவ ள்—என்பதற்கேற்ப இங்கு வர்ணிக்கப்பட்டது.

செயலேதுமின்றி மிகத் துயரமுற்றிருக்கும் நினது தோழியை எங்ஙனம் வருந்தச் செய்யுமோ, அவ்விதம் பகலில் முற் கூறியவண்ணம் பற்பலப் பணிகளிற் கருத்தாயிருக்கையில் அவளைத் துன்புறுத்தா தென்பது எனது துணிபு; ஆதலின், நீ, எனது செய்திகளைச் செப்பி இன்புறச் செய்வதற்கு மிகவும் இன்றியமையாததான நள்ளிரவில், மாளிகையின் ஓர் சாளரத்தின்கண் தங்கியிருந்தவண்ணம், நித்திரையின்றி நிலத்திற் படுத்திருக்கும் அக் கற்பழியாமாதைக்[1] கண்ணுறுவாயாக. மேலும் அவள், அப்பொழுது, கீழ்த்திசையின் கீழுதித்திருக்கும் கலையொன்றையே மிகுதியாகக் கொண்ட இந்துவின் இளம் பிறைபோல், மனநோயால் மிக மெலிவுற்று விரஹகாலத்திற்கேற்ற சயனத்தில் ஒருச்சாய்ந்து சயனித்தவளாய்[2]—முன்பு என்றனுடன் இஷ்டப்படி இன்பங்களனுபவித்துக் கொண்டு நொடியைப் போற் போக்கிய அவ்விரவையே இப்பொழுது என் பிரிவாற்றுமையினுற் பெரிதும் வளர்வதாகப் பாவிப்பதால்— அவ்விரவைக் கடுஞ்சூடாகக் கணீர் சொரிந்தவண்ணம் கஷ்டத்துடன் கழிப்பள். அவள், வெற்று நீராட்டத்தினல் வறண்டு கண்டஸ்தலமளவும் புரண்டு விழுந்த முன்னெற்றிமயிர்களை, தளிர்போன்ற உதடுகளுக்கு

1. மேகம் தனக்கு நண்பனுதலாலும், அவள் மஹாபதிவிரதையானதாலும், நள்ளிரவில் அவளைக் காணப் போவது குற்றமல்லவெனக் குறிப்பிட 'கற்பழியாமாதை' என்றுரைத்தனன்.

2. அவள், மிக மெலிவுற்று விரஹகாலத்திற்கேற்ற சயனத்தில் ஒருக்களித்துப் படுத்திருப்பதானது, கீழ்த்திசையின் கீழ் ஒரு மூலையாகச் சாய்ந்த இளம்பிறை போல் இருப்பதாகக் கூறப்படுகிறது.

வாட்டமளிக்கும் பெருமூச்சால் அலைந்தாடச் செய்து கொண்டும், மேன்மேலும் ததும்பி யெழும் கண்ணீர் இடங்கொடாது இடையூறு செய்கையிலும், கனவிலாவது எனது சேர்க்கை நேரிடுமோவென நித்திரையை ஆவலுடன் விரும்பியவண்ணமு மிருப்பளென்பது திண்ணம். பிரிவுறும் முதல் தினத்திற் பூமாலையகற்றிப் பெருந் துயரத்துடன் முடியப் பெற்றதும், சாபத்தினிறுதியிற் சோகம் நீங்கிய என்றனால் அவிழ்க்கப் பெற வேண்டியதும், சிக்குண்டுச் சீர்குலைந் திருப்பதால் பரிசிக்குங்கால் கிலேசம் தருவதும், ஒரு பின்னலாயமைக்கப்பெற்றிருப்பது மானகேசபாசத்தை,[1] சிதைக்கப்படாமையால் வளர்ந்திருக்கும் நகங்களையுடைய தனது கரத்தினால் கபோலத்திலிருந்து அடிக்கடி ஒதுக்கிக்கொண்டு ஒருவாறு ஏக்கமுற்றிருப்பள். அன்றியும், அவள், அமுதப்பெருக்குபோல் அதி சீதளமாகச் சாளரங்களிற் புகுந்து வரும் மதியின் கதிரொளிகளை—அவற்றினிடம் விரஹத்திற்கு முன்பிருந்தப் பிரீதியினால்—முதலிற் பெருமையுடன் பார்த்துவிட்டு, அங்ஙனமே மிகத் துன்பமுற்றுத் திரும்பிய [2] தன் கண்களை, கண்ணீர் கசிந்துக் கனமாயிருக்கும் இமை மயிர்களால்

1. கேசபாசம் = தலைமயிர். [முற்காலத்தில் பதிவிரதைகள், பர்த்தாக்கள் தேசாந்தரம் போயிருக்கையில் தமது தலைமயிரை ஒரு பின்னலாகப் பின்னிக் கட்டிவிடுவதும், பின்பு பர்த்தாக்கள் வந்து சேர்ந்ததும், தாமோ அல்லது பர்த்தாக்களோ அதை அவிழ்த்துவிடுவதும் ஆசாரமாம்.]

2. தம்பதிகள் பிரியாமலிருக்கையில் சந்திரன் முதலியதைக் காண்பது மகிழ்ச்சிக்கிடமாகவும், விரஹகாலத்தில் சந்திரன் முதலியதைக் காண்பது மிக ஸந்தாபகரமாகவும் இருப்பதியல்பு.

மூடிக் கொண்டு, மேகங்களால் மறைக்கப் பெற்ற பகற் பொழுதில் மூடிக் கொள்ளாமலும் மலர்ச்சியுறாமலு மிருக்கும் நிலத் தாமரைபோல், நித்திரையைப் பெறா மலும் விழிப்புறாமலும் வெகு வருத்தமுற்ற நடு நிலைமை யிலிருப்பள். பூண்களைப் பரிஹரித்துப் பரிதவிக்கத் தகும் பெருங் கஷ்டதசையைப் பெற்றதான தனது அழகிய மேனியைச் சயனத்தின்மீது அடிக்கடிச் சாய்த்து,[1] அதனை மிகத் துயரத்துடன் தாங்குப வளான வன்மை யிழந்த அவ்வேழைப் பெண்மணி, நின்றனையும் நூதனமான நீருருவங்கொண்ட கண்ணீ ரைச் சொரியுமாறு நிச்சயமாய்ச் செய்யப் போகின் றனள்; ஏனெனில், ஈரமுள்ள உள்ளத்தோர்[2] அனை வரும் பெரும்பாலும் கருணைபுரிந்து மனங் கசியுந் தன்மையராவரன்றோ? 18 - 26.

"நினது ப்ரியஸகியின் மனது என்றனிடம் நிரம் பவும் அன்புகொண்டதென யான் அறிவேன்; ஆத லால் முதற் பிரிவில் அவள் இத்தகைய நிலைமையி லிருப் பளென ஊஹித்துக் கூறுகின்றேன்; ஆனது பற்றி, யான் மனதைக் கவர்ந்திழுக்கவல்ல ஸௌந்தர்யம் வாய்ந்தவனென்கிற எண்ணமே இங்ஙனம் என்றனை மொழியச் செய்ததெனக் கருதவேண்டாம்; அப்பா! யான் விளம்பிய விஷயமனைத்தும் விரைவிலேயே இவ்

1 மனம் மிகக் கவலை கொண்டிருப்பதால் ஒன்றுந் தோன்றாமல், சற்றுப் படுப்பதும் சற்றெழுந்துட்காருவதுமாயி ருப்பது இவ்வித நிலைமைகளுக் கியல்பு.

2. ஈரமுள்ள உள்ளத்தோர் = இரக்கமுறும் தன்மையர்; மேகமும் நீரை யுட்கொண்டு ஈரமான உட்புறத்தையுடையது- என்று இருவகையான பொருளுண்டு.

விதமென நின்றனக்கு நேரில் நன்கு விளங்கப்போகின்றது. 27.

"வாரி முடிக்காத முன்னெற்றிமயிர்களால் தடையுண்ட கடைக்கண்பார்வையை யுடையதும், அஞ்ஜனப் பசையற்றதும், மதுபானத்தை மறுத்ததால் புருவநெறிப்பெனும் விலாஸத்தை மறந்ததுமான அம் மிருகாக்ஷியின் [1] கண்ணனது, நீ அருகிற் சென்றதும் மேற்புறமாகத் துடிக்கக் கூடுமாதலின், அந்த அப்பொழுதுத் துள்ளியோடும் மத்ஸியத்தினால் அசைக்கப்பெற்றுக் குலுங்கும் கருங்குவளைமலருக்கு நிகரான சீர்மையை ஏற்குமென் றெண்ணுகிறேன்.[2] மேலும் என்றனால் உண்டாக்கப் பெற்ற நகத்தழும்புகளை இழந்து வருவதும், நெடுநாட்களா யணியப்பெற்ற நல்

1. மிருகாக்ஷி=மான்களுடைய கண்களைப் போல் விசாலமான அழகிய கண்களை யுடையவள். [தலைமயிரை வாரி முடிக்காமலும், கண்களுக்கு மை தீட்டிக் கொள்ளாமலும், மதுபானம் செய்யாமலு மிருப்பதற்குப் பிரிவாற்றாமையே காரணமென்க.]

2. கண்ணனது மேற்புறமாகத் துடித்தால் இஷ்டலாபமுண்டாம் என்று நிமித்தநிதானமென்கிற சகுனசாஸ்திரம் கூறுகிறது. இங்கு கணவனது க்ஷேமஸமாசாரம் சொல்ல மேகம் வந்திருப்பதே இஷ்டலாபம். [ப்ராஸ்பந்ததைகம் நயநம் ஸுகேச்யா: மீநாஹதம் பத்மமிவாபிதாம்ரம் = சுரிகுழலாளான ஸீதாதேவியின் கண்ணொன்று, அக்காலை, மத்ஸியத்தால் தாக்கப் பெற்றசையும் தாமரை மலர்போலத் துடித்தது; என்று, ஹனுமான் ஸீதையிருக்குமிட மடைந்ததும் ஸ்ரீவால்மீகி வர்ணிக்கும் அழகிய விஷயத்தை இக் கவியும் இங்கு உசிதமெனப் பின் பற்றினு னென்க.]

முத்துக் கோவையை [1] விதிவசத்தினால் விலக்கியிருப்பதும், திரண்டுருண்டு வளர்ந்துப் பசுமையாயுள்ள வாழைமரத்தண்டுபோல் வெண்மையானதுமான அவளது இடது துடையும் துடிக்கப்போகின்றது. 28 - 29.

"ஓ அம்புதமே! நீ அவ்விடம் செல்லுங்கால், அவள் அமைதியுடன் துயிலுறு மின்பத்தைப் பெற்றிருப்பளேல், அக்காலே, நீ அவளருகில் முழக்கஞ் செய்யாது, ஓர் யாமமளவும் பொறுமையுடன் காத்திருக்க வேண்டுகிறேன்; அவளது அன்பனான யான் எங்ஙனமோ கனவிற் போய்த் தோன்ற, அப்பொழுது அவ லதிகரித்து என்றனை நன்கு ஆலிங்கனம் செய்துகொள்வளாதலின், அவளது கொடிபோன்ற கரங்களின் கட்டானது, எனது கண்டத்திலிருந்து அந்த க்ஷணமே அவிழ்ந்து விடுமாறு நினது முழக்கங்களால் செய்துவிடலாகாது. 30.

"அப்பால், நினது நீர்த்திவலைகளால் குளிர்ந்து உன்றனிடமிருந்துண்டாகும் மந்தமாருதத்தினால், நீ அவளை மெல்லென எழுப்பி, மிக நூதனமான மல்லியரும்புகளையும் அவளது மனத்தையும் ஒரு மிக்க மலாச் செய்கையில்,[2] அப் பெண்மணியானவள், நீ சாய்ந்து

1. துடையளவும் புரளும் நீண்ட நல்முத்துச் சரங்களுடன் கூடிய அரைநூண்மாலையை வடதேசத்து மாதர் அணிவது வழக்கம்.

2. மழைத் திவலைகளால் சீதளமான சாற்றின் பரிசத்தால் மலர்கள் விகஸிப்பதும், பிராணிகளின் மேனிகளது ஸந்தாப முதலியவை சாந்தி யடைவதும் அனைவரும் அறிந்ததே.

நிற்கும் சாளரத்தை இமைகளசையாமற் பார்த்த வண்ண மிருக்க, [1] நினது மின்னொளியை யுள்ளடக்கிய வாறு, கர்ஜனைகளெனும் கம்பீரமொழிகள் கொண்டு நீ பின்வரும் செய்திகளைச் செப்ப முயல்வாயாக. 31:—

"' ஓ நீடூழிவாழும் நாயகனைப் பெற்ற [2] நங்காய்! என்றனை—மார்க்கத்திற் களைத்து வருத்த முறும் வழிப் போக்கரது குழாங்களை, காதுகளுக் கினிமையான கம்பீர கர்ஜனைகளால் அவரது அகங்களிலுள்ள அபலைகளின் [3] வேணிகளை அவிழ்த்துவிட ஆவலுள்ளனவாகச் செய்து, அவரை மிகத் துரிதமா யேகுவதற் கேவுந் திறமை பொருந்திய நீர்கொண்ட மெனவும், நினது மணாளன் மொழிந்த செய்திகளை மனத்தினில் வாங்கிக்கொண்டு உனதிடம் வந்திருக்கும் அவரது அருமைத் தோழனெனவும் அறியக் கடவாய்.''' 32.

" நற்குண சாலியான மேகமே! நீ இவ்வாறுரைத் ததும், அவள், ஆஞ்ஜனேயரைக் கண்ட ஸீதாபிராட்டி போல் மிகு மகிழ்ச்சியினெழுச்சியினால் ஆறுதலுற்று உள்ளம் பூரித்தவளாய், உயர நிமிர்ந்து உன்றனை உற்று

---

1. மின்னொளி வீசினால் அவள் கண்கூசிப் பார்க்கமாட்டாளாதலால், மின்னலை யுள்ளடக்கிக்கொள்ளெனக் கூறினன்.

2. இதனால், தன் பர்த்தாவுக்கு ஆபத்துண்டாகவில்லை யென்றும், பிழைத்திருப்பதாகவும் அறிந்து, அவள், முதலிலேயே மனம் பதைக்காமல் ஆறுதலுறட்டும்—என்று மேகம் இங்ஙனம் ஸம்போதனம் செய்கின்றதாம்.

3. இயற்கையிலேயே பெண்மக்கள் பலங்குன்றியவராதலால், அவர் அபலைகள் எனப்படுவர்; தமது அருமைக் கணவரை விட்டுப் பிரிந்திருப்பதால், அவர்கள் இன்னும் மனவருத்தத்தால் மெலிந்திருப்பரெனக் குறிக்கவே இங்கு அபலைகள் என்று பிரயோகிக்கப்பட்டது.

நோக்கித் தகுந்தவாறு உபசரித்துவிட்டு, அப்பால் ஊக்கத்துடன் உன்றனிடமிருந்து செய்திகளைத் தையும் செவியுறப் போகின்றனள்; ஏனெனில், உயர் குலத்துதித்த உத்தமஸ்திரீகளுக்கு, அவரது நட்புமிருந்த நாயகரிடமிருந்து நண்பனொருவன் வரினும், அதைந்து, அம் மாதரால், அக் கணவரது சேர்க்கையினும் சிறிதே குறைந்ததெனக் கருதப்படுமாம். 33.

" நல்லாயுளைப் பெற்று நெடுங்காலம் வாழும் நண்பனே! எனது மொழியினாலும், உதவி புரியும் உனது வார்த்தையினாலும் அவளை நோக்கி அடியில் வருமாறு மொழிந்திடுவாயாக:—''' ஓ கோமளாங்கி! உன்றனை விட்டு எப்பொழுதும் பிரியாமலிருந்த நினது பர்த்தா, இப்பொழுது, இராமகிரியிலுள்ள ஆசிரமங்களின்கண், அபாயமேது மின்றி க்ஷேமமாய் வஸித்து வருகின்றனர்; அவரை விட்டுப் பிரிந்திருக்கும் உனது க்ஷேம விருத்தாந்தத்தையும் அவர் வினவுகின்றனர்.'''
அப்பா! எளிதில் ஆபத்துறுமியல்புடைய பிராணிகளிடம் இதுவே முதலில் மொழியத் தகுந்ததோர் முக்கிய விஷயமாம். 34.

" நீ மீண்டும் இங்ஙனம் உரைக்கவேண்டும்:—
'''நினது பர்த்தா, அப் பாழும் பகையாளியான விதியினால் தடுக்கப்பெற்று, இப்பொழுது இவ்விடம் வர வழியற்றவராய், வெகு தூரத்திலிருந்தவண்ணம்—மிக மெலிவுற்றதும், மன்மததாபத்தினாற் கடுஞ்சூடுகொண்டதும், கண்ணீரைச் சொரிந்தவாறிருப்பதும், ஆவலதிகரித்தலைவதும், மென்மேலும் மிகப் பெருமூச்

செறிவதுமான அவரது சரீரத்தினல், அங்ஙனமே மிகவு மிளைத்து, ஸந்தாபமுற்று, கண்ணீரைப் பெருக்கி, இடையுறு மலாவல் கொண்டு, சுடச் சுடப் பெருமூச்செறியும் நினது அங்கத்தினில் அனுப்ரவேசிப்பதாக அந்தந்த எண்ணங்களால் அவர் தியானம் செய்கின்றனரம்மா ![1] யாதொருவர், சாபலிய மேலிட்டவராய், ஸகிகளது முன்னிலையில், நினது முகத்தைத் தனது முகங்கொண்டு பரிசிக்கப் பேரவாவுடன், வெளிப்படையா யுரைக்கத் தகும் பேச்சையும்—முன்பு நினது செவிதனில் முகம் வைத்து மெல்லென மொழிய முயன்றனரோ, அத்தகைய உனது நாயகன், இப்பொழுது கண்கொண்டு காணவும் காதுகளால் கேட்கவுமியலாதவாறு நெடுந்தூரத்திற் பிரிந்திருந்தவராய், ஆவலதிகரித்து மேலெழுந்து வந்த மொழிகளை, இங்ஙனம் என்றனைக் கொண்டு உன்றனக்கு உரைத்திடுகின்றனர். 35 - 36:—

"" எனதருமைக் காதலியே! யான், கருஞ்சிவைதைக் கொடிகளில் நினது அங்கத்தின் அழகையும், மிரண்ட மான்பேடுகளது கண்ணோக்கத்தினில் உனது பார்வையின் பான்மையையும், வெண்கதிரோனிடம் உனது வதனத்தின் வனப்பையும், மயிற்றோகைத்

1. மிக மெலிவுற்றதும் என்பதுமுதல், மிகப் பெருமூச்செறிவதுமான என்கிறவரையில் கூறப்பட்ட தனது (யக்ஷனது) சரீரநிலைமைகளை நோக்கித் தன் மனைவியின் தேஹநிலைமைகளும் அவ்விதமே இருக்குமென்று அனுமானித்து, தனது நிலைமைக் கேற்ற விசேஷணங்களையே தனது மனைவியின் மேனிக்கும்—மிகவுமிளைத்து என்பதுமுதலாக முறையே மொழிந்தனன் என்றறிக.

திரள்களின்கண் நினது மயிர்களின் மனோஹரத்தன்மையையும், ஆறுகளிற் புலப்படும் சிற்றலைகளின்பால் நினது புருவநெறிப்பின் நேர்த்தியான விலாஸங்களையும் கண்ணுற்று வருகின்றேனல்லாது,[1] ஓ சண்டி![2] எங்கேனும் ஒரே பொருளில் உனது ஒப்புமையனைத்தும், அந்தோ ஒரு மிக்கச் சேர்ந்திருக்க யான் காண்கிலேன்! யான், பிரணயகோபங்கொண்ட[3] உன்றனது உருவத்தை, ஓர் சிலாதலத்தின்கண் காவிக்கற்களின் வர்ணங்களைக்கொண்டு வரைந்து, பின்னர், நினது பாதங்களில் என்றனையும் வீழ்ந்திருக்கும் பாவனையாய் எழுதி முடிக்க எண்ணங்கொண்டிருக்கையிலேயே, அடிக்கடிப் பொங்கியெழும் கண்ணீர்கள்

---

1. வெகு நேசமுள்ள தம்பதிகள், ஒருவரை யொருவர் விட்டுப் பிரிந்திருக்கையில் விரஹவேதனையால் பீடிக்கப்பட, அப்பொழுது, கணவன் மனைவியினுடையவும் மனைவி கணவனுடையவும் வடிவத்திற் கொப்பான வஸ்துக்களைக் காண்பதும், அவ் வடிவத்திற்சேற்ற சித்திரத்தை யெழுதுவதும், கனவுகளில் அவரைக் காண விரும்புவதும், அவரது அங்கங்களைப் பரிசித்துவரும் பொருட்களைப் பார்ப்பது அல்லது பரிசிப்பதும், அத் தம்பதிகளின் மனம் ஆறுதலுறும் உபாயங்களாம்; அவற்றுள் இங்கு ஒப்புமையுள்ள வஸ்துக்களைக் காணல் என்கிற முதல் விஷயம் கூறப்பட்டது.

2. யக்ஷனவன், தன் மனைவிக் கொப்பான மற்றொரு பொருளேனும் காணக் கிடைக்க வில்லையே யென்று மனஞ்சலித்து, மாயக் கோபத்தினால் மனைவியை நோக்கி 'சண்டி' எனத் திட்டுவது போல் கூறுகிறான்.

3. பிரணயகோபம் = தம்பதிகளுக்குப் பிரீதிவிசேஷத்தால் ஒருவருக் கொருவர் நேரிடும் கபடமான கோபம்.

எனது கண்ணை மறைத்திடுகின்றனவே![1] இப் பொல்லாத் தைவம், அவ் வகையிலும் எமது சேர்க்கையை ஸஹிக்க வில்லையன்றோ! எங்ஙனமோ[2] எனது கனவுகளில் வந்து தோன்றி என்றனால் அவ்வாறு கிடைக்கப் பெற்ற நின்றனை நெருங்க ஆலிங்கனம் செய்வதற்காக ஆகாயத்தில் ஆசையுடன் புயங்களை வீணில் நீட்டும் என்றனைக் கண்ணுறும் இவ்விடத்து வனதேவதைகளின் கண்களிலிருந்து நல்முத்துகளைப் போல் மிகத் திரண்டுருண்ட கண்ணீர்த் துளிகள், காட்டுமரத்தளிர்களின்கண்[3] பலவாறு உதிராம லிருப்பதில்லை.[4] நற்குணங்களுக்குப் புகலிடமானவளே!. இமயமலையிலுள்ள தேவதாருமரங்களது தளிர்களின் மொட்டுகளை யொடித்து, அவற்றிலிருந்தொழுகும் பாற்பெருக்கின் பற்றினால் பரிமளம் பெற்று, அப்பொழுதே தென்திசை நோக்கி வீசும் குளிர்ந்த மந்தமாருதங்கள், முதலில் நினது அங்கத்தைப் பரிசித்

---

1. இதனால் சித்திரமெழுதல் என்கிற இரண்டாவது விஷயம் கூறப்பட்டது.

2. விரஹ வேதனையால் உறக்கங் கொள்வது மிகவுமரிதாதலால் 'எங்ஙனமோ' எனக் கூறப்பட்டது.

3. தேவதை முதலிய மஹாத்மாக்களது கண்ணீர் பூமியில் விழுந்தால், அத் துயரத்திற்கு இலக்ஷியமா யிருப்பவர் துன்பம் அல்லது மரணம் அடைவர் என்று சாஸ்திரம் கூறுவதால், யக்ஷனுக்கு அவ்வித ஆபத்து ஒன்று முண்டாகவில்லை யென்று குறிப்பதற்காகவே, கண்ணீர்கள் தளிர்களில் வீழ்ந்தன என்றுரைக்கப்பட்டது.

4. காதலியைக் கனவுதனிற் காண்பது இதனால் மொழியப்பட்டது.

திருக்குமென்றெண்ணி, யான் அவற்றை ஆதரவுடன் தழுவுகின்றேன்.[1] 37 - 40.

"''ஓ சஞ்சலாக்ஷி![2] வெகு நீண்ட யாமங்களையுடைய இரவானது [3]எங்ஙனம்நொடியைப்போல் சுருக்கங் கொள்ளுமெனவும், எல்லாக் காலவேற்றுமைகளிலும் பகற்பொழுதும் எவ்வாறு மிக மந்தமான வெயிலுடன் கூடியதாயாகுமெனவும் பலவாறு ஆகாத பணிகளையும் ஆகவேண்டி விரும்பும் என் மனதானது, மிகவும் ஸந்தாபகரமான நினது விரஹவேதனைகளால் இங்ஙனம் சரணின்றி ஸங்கடத்தில் வீழ்ந்ததே! மங்களகரமான மேனியழகு வாய்ந்தவளே![4] நானே, நாநாவிதமாக எவ்வெவற்றையோ எண்ணியெண்ணி எனதுடலுக்குத் தீங்கு நேரிடாவண்ணம் அதைத் தாங்கி வருகின்றேனாதலின், நீயும்இப்பொழுது இந்நிலைமையை

1. மனைவியினது மேனியின் பரிசத்தைப் பெற்ற பொருளிற் பிரீதி யானது, இதனால் கூறப்பட்டது. [வாஹி வாத யத: காந்தா தாம் ஸ்ப்ருஷ்ட்வா மாமபி ஸ்ப்ருச = வாயுவே! மனோஹரமான வடிவழகு வாய்ந்த என் தர்மபத்தினியான ஸீதையை முதலிற் பரிசித்து, பிறகு அங்கிருந்து என்மீது வீசுவாயாக; என்கிற ஸ்ரீமத் ராமாயணவர்ணனை இக் கவிசிரோமணியினாலும் ஆதரவுடன் பின்பற்றப் பட்டதெனக.]

2. சஞ்சலாக்ஷி = மிரண்டு அழகாய் அசைந்து விழிக்கும் கண்களை யுடையவள்.

3. விரஹவேதனையால் நித்திரையின்றி விழித்திருப்பதால், இரவின் யாமங்கள் நீண்டு வளர்வதுபோல் தோற்றுவதியல்பு.

4. தன் மனைவி, மங்களகரமான இலக்ஷணங்களுடன் கூடிய சரீரத்தைப் பெற்றிருப்பதால், யக்ஷன் (அவள் கணவனை) தனக்கு அசுபமான தீங்கு நேரிடாதென்று, இந்த ஸம்போதனத்தினால் குறிப்பிடுகின்றான்.

நோக்கி நிரம்பவும் அச்சமுற வேண்டாம்; உலகில் எவருக்குதான் இன்பம் அல்லது துன்பமாயினும் அளவிறந்ததாய் இடைவிடாம லுண்டாயிற்று? அந்தந்த தசைகளெல்லாம் சக்கிரமுனைபோல் கீழும் மேலுமாகப் புரண்டோடு மியல்புடையனவன்றோ? சார்ங்க மென்னும் வில்லைக் கரந்தனிலேந்திய ஸ்ரீமந் நாராயணன், சேஷசயனத்திலிருந்து எழுந்திருக்கையில்[1] என்றனக்குச் சாபவிமோசனமாகும்; ஆதலின், இன்னும் மிகுந்துள்ள நான்கு மாதங்களையும் மெல்லெனக் கண்களை மூடிக் கொண்டு நீ கழித்திடுவாயாக; பின்னர், யாம் இருவரும் சரத்காலத்திற் பூர்ணசந்திரனது மாசற்ற நிலவினால் மனோஹரமாய் விளங்கும் இரவுகளில், விரஹத்தினால் மிகவும் செழித்தோங்கிய நமது அந்தந்த கோரிக்கைகளனைத்தையும் களிப்புடன் அநுபவிக்கப் போகின்றனம். 41 - 43''''

''' அம்மா! நின்றனக்கு நம்பிக்கை யுண்டாவதற்கு அவர் மீண்டும் மொழிந்ததாவது:—'''' முன்னொருகால், நீ, சயனத்தில் எனது கழுத்தைத் தழுவியவண்ணம் கண்வளர்ந்து, மீளவும் திடீரென ஏதோ குரல் விட்டுப் புலம்பிக்கொண்டே கண்விழிக்க, யான் அது கண்டு உன்றனைப் பலமுறை வினவ, நீயும் 'வஞ்

1. ஸ்ரீமந் நாராயணன், ஆடிமாதத்து சுக்கில ஏகாதசியன்று பாற்கடலில் சேஷதல்பத்தின்மீது சயனித்து, கார்த்திகை மாதத்து ஏகாதசியில் மீண்டும் பள்ளியெழுந்திருப்பதாக சாஸ்திரம். [ஆகையால், இதற்குமுன் சரத்கால ஆரம்பத்தில் யக்ஷனுக்குச் சாபம் நேரிட்டு, முற்கூறியபடி ஒரு வருஷகாலம் அச சாபம் அனுபவிக்கப்பட்டு, வர்ஷருதுவின் இறுதியில் அல்லது சரத்காலத்தின் ஆரம்பத்தில் அதிலிருந்து விமோசன முண்டாயிற்று; என்றறியவும்.]

சனைக் காரரே! நீர் எவளோ வேறொருத்தியைக் களிப்புறச் செய்துகொண்டிருப்பதாகக் கனவுகண்டேனே' என உள்ளத்தில் நகைத்தவாறு நவின்றனையன்றோ? கருநெய்தல்மலர் போன்ற கரிய நேத்திரங்களுடையவளே! இவ்வாறறிவிக்கப் பெற்ற அறிகுறியினால் யான் உயிருடனிருப்பதா யுணர்ந்த பின், உலகத்தோர் கூறும் வீண் வார்த்தைகளால் எனது உயிர்வாழ்க்கையில் நின்றனக்கு நம்பிக்கையின்மை நேரிடாமலிருக்கட்டும்; ஏனெனில், ஒருவரைவிட்டொருவர் பிரிந்த பின்னர், அவரது அன்பானது நாளடைவில் அழிவுறுமென ஜனங்கள் ஏதோ கூறுகின்றனரெனினும், அவ்வன்பானது அனுபவிக்ப் படாமையால், விருப்பமான வஸ்துவினிடம் இன்னும் விசேஷமாய் இன்பமேலிட்டு, பிரீதியின் இராசியாகப் பெருகுமென்றுரைப்பதே பொருந்தும்."'' என மொழிந்தனர்.''' 44 - 45.

"ஒளிர்ந்த குணமமைந்த கார்முகிலே![1] நீ ஊற்றோரால் செய்வதற்குற்ற இப் பேருதவியை என்றனக்குச் செய்திடுவதாய் மனவுறுதிகொண்டனையோ? நீ மறுமொழி கூறினையாயின், அப்பொழுதுதான் உதாரத் தன்மை உன்றனக்கு உண்டென்றுரைக்க யான் கருதுகிறேனில்லை;[2] ஏனெனில் சாதகப் பறவைகள் உன்

---

1. தண்ணீரையுட்கொண்டிருப்பதால் மேகம் குளிர்ந்த குணமுள்ளதெனவும், ஆசையினாலேயே தனது வேண்டுகோளை மறுத்துவிடும் சடுங்குணம் அதற்கு இராதெனவும் இதனால் குறிப்பிடப்பட்டது.

2. இரச்சமற்று எனது வேண்டுகோளை மறுத்துவிடத் தகும் அவ்வித தைரியம் உன்றனக்கு உண்டென யான் கருதவில்லை—என்று பூர்ணஸரஸ்வதி பொருளுரைக்கின்றான்.

றனை யாசிக்குங்கால்,[1] நீ, நிச்சப்தமாயிருந்த வண்ண மல்லவோ அவற்றிற்குத் தண்ணீரைத் தந்தருளுகின் றனை? மேன்மக்கள், தமது பிரீதிக்குப் புகலிடமானவரி டத்துஅவர் விரும்பிய உதவிகளைக் காரியத்தினால் நிறை வேற்றிக் காட்டுவதையே மறுமொழியாகக் கொண்ட வரன்றோ[2]? எனதன்பார்ந்த அம்புதமே![3] அனுசித மாக[4] இங்ஙனம் வேண்டிக்கொள்ள முயன்ற என்ற னக்கு விருப்பமான இப் பணியை, எனதிடம் நேசப் பான்மையினாலோ, இன்பமுற்ற இல்லாளை விட்டுப் பிரிந்திருக்கின்றேனென்று இரக்கங்கொண்ட என்

1. சாதகப்பறவைகள் மழைநீரை ஆகாயத்திலேயே ஏந் திப் பருகுமேயன்றி, பூமியில் வீழ்ந்த நீரைக் குடிக்கமாட்டா என்று கவிகள் கூறுகின்றனர்.

2. கர்ஜதி சரதி ந வர்ஷதி வர்ஷதி வர்ஷாஸு நிஸ் வனோ மேக: | நீசோ வததி ந குருதே ந வததி ஸுஜந: கரோத்யேவ—சரத்காலத்து மேகம் பெருமுழக்கங்கொள்ளுமே யன்றித் தண்ணீரைப் பொழியாது: மாரிகாலத்திலோ முழக்க மின்றியே நன்கு நீரைச் சொரியும்; அங்ஙனமே கீழ்மக்கள் வாயால் பெரிதும் பெருமை கூறுவரேயன்றி உதவி செய்யார் கள்; மேன்மக்களோ மௌனமாயிருந்தவண்ணம் பேருதவி யைச் செய்து முடிப்பர்; என்று இதற்கேற்ற நீதிவாக்கிய மொன்றுண்டு.

3 அம்புதம் = (தண்ணீரைக்கொடுக் கும்)மேகம்;. இஃது தாபத்தால் வருந்துபவரைத் தண்ணீரளித்துக் குளிரச் செய்யு மியல்புடையதாதலால் (ஆச்வாஸம் 1. பத்தியம் 7. பார்க்க) மன்மததாபத்தினால் தவிக்கும் யக்ஷனுக்கு நன்மை செய்து அவனைக் குளிரச்செய்யக் கூடியதென, இதனால் குறிக்கப்படு கிறது.

4. புஷ்கலாவர்த்த மென்கிற புகழ்பெற்ற வம்சத்திற் பிறந்ததும், தேவேந்திரனுடைய அதிகாரபுருடனானதும், இஷ்டப்படி பல ரூபங்களெடுத்துக்கொள்ளும் பிரபாவமுடை

ணத்தினாலோ நீ செய்துவிட்டு, மாரிகாலத்திற்கேற்ப மனோஹரமான சீர்மைகளை மிகுதியாகப் பெற்று[1] மனமுவந்த தேயங்களிலெல்லாம் ஸஞ்சரிப்பாயாக; ஆனால், யான் மனைவியை விட்டுப் பிரிந்திருப்பது போல், நின்றனக்கும் மின்னொளியை[2] விட்டுப் பிரியும் நிலைமை நொடிப் பொழுதும் நேரிடாமலிருக்கவேண்டும்.[3] 46—47."

முற்றிற்று.

---

யதுமான இவ்வித மேகத்தைத் தூது விடுவதென்னும் எளிய காரியத்தைச் செய்ய ஏவுவது அனுசிதமாம்; ஆகையால், 'என திடம் நேசப்பான்மையினால்...' என்று அதற்குப் பரிஹாரம் கூறுகிறான்.

1. நாரைகளால் அனுஸரிக்கப்படுவது (ஆ. 1. பத் 9.), இந்திரனுஸ்ஸைப் பெறுதல் (ஆ. 1. பத் 15.), மயில்கள் நர்த்தனமாடுதல் (ஆ. 1. பத் 22.), அன்னப்பறவைகள் அனுஸரித்தல் (ஆ. 1. பத் 11.) மின்னலால் பிரகாசித்தல் முதலிய சீர்மைகளைப் பெற்று; எனக் கருத்து.

2. மின்னலை மேகத்துக்கு மனைவியாகக் கவிகள் வர்ணிப்பது முறையென முன்பே மொழியப்பட்டிருக்கிறது.

3. யக்ஷன் மெகத்தைநோக்கி மொழியும் பாவனையாய், மஹாகவியானவன் கிரந்தத்தின் முடிவில் அதைப் படிப்பவருக்கும் இதனால் ஆசிகூறினனென்க.

# அனுபந்தம் 1.

[வல்லபதேவன், பூர்ணஸரஸ்வதீ முதலியவர்களால் மேக ஸந்தேசத்தைச் சேர்ந்தவையல்லவென்று விடப்பெற்றவையும், இடையில் சேர்க்கப்பட்டவையானாலும் உரை யெழுதுவதாக மல்லிநாதனால் கூறப்படுபவையும், நேமிதூதகாவியத்தில் எடுத்துரைக்கப்பட்டனவுமான ச்லோகங்களுக்கு மொழி பெயர்ப்பு.]

## முதல் ஆச்வாஸத்தில்

(18, 19, இப் பத்தியங்களுக்கு இடையில் படிக்கவேண்டியது.)

* ஓ நீர்கொண்ட மேகமே! அவ்வாம்ரகூடபர்வதமானது, வழியிற் களைப்புற்று அதற்கெதிர்முகமாகச் சென்ற உன்றனை, தனது உன்னதமான முடியினால் போற்றிக்கொண்டே தாங்கப் போகின்றது; நீயும் அவ்விடத்து அடவியிலுண்டாகும் கோடைகாலத் தனலை மழையைப் பொழிந்து அவித்துவிடக் கடவாய்; நல்லெண்ணத்துடன் மனங்கசிந்து மஹான்களுக்குச் செய்த உதவியானது உடனே நற்பயனளிக்கக் கூடியதன்றோ? 1

---

* இக்குறி நேமிதூதகாவியத்தில் எடுக்கப்பட்ட ச்லோகங்களைக் குறிக்கும். ‡ இக்குறி மல்லிநாதனால் வியாக்கியானம் செய்யப்பட்ட ச்லோகங்களைக் குறிக்கும்.

1. வடமொழியில் இதைச் சார்ந்த பத்தியத்தை, நிர்ணயஸாகரபிரஸ்ஸில் அச்சிட்ட மேகஸந்தேசத்தில் 15 வது பக்கத்துக் கீழ்வரிசையிற் காண்க. [மல்லிநாதனால் வியாக்கியானம்

(21, 22 வது பத்தியங்களுக்கு இடையில்)

* ‡ ஸித்தகணங்கள், வானத்திலேயே நீர்த்துளிகளை யேந்திப் பருகுவதிற் சாதுரியம் வாய்ந்த சாதக பக்ஷிகளைக் கண்ணோக்கிக்கொண்டும், பந்தி பந்தியாகப் பறந்தோடும் நாரையென்னும் பறவைகளை ஒருவரோடொருவர் எண்ணி யெண்ணிப் பார்வையிடச் செய்து கொண்டி மிருக்குங்கால், திடீரென நீ பெரு முழக்கங் கொள்ள, அது கேட்டு அன்பார்ந்த நாயிகைகள் அங்கம் நடுங்கப் பரபரப்புடன் தம்மை ஆலிங்கனம் செய்து கொள்ளும் ஆனந்தத்தை யடைந்தவராய், நின்றனைக் கொண்டாடப் போகின்றனர்.

(31, 32 வது பத்தியங்களுக்கிடையிலுள்ள 3 ச்லோகங்கள்.)

* ‡ அந் நகரத்துக் கடைவீதிகளில் வரிசையாக வைக்கப் பெற்றிருக்கும் பெருமணிகளை நடுநாயகமாகப் பெற்ற நிர்மலமான ஹாரங்களையும், முத்துச் சிப்பிகளையும், மேன்மையான சங்குகளையும், இளம்புற்களைப்போல் பசுமை நிறங்கொண்டு மேலோங்கி விளங்கும் கதிரொளிகளையுடைய மரகதமணிகளையும் கோடிக் கணக்காகக் கண்ணுறுங்கால், கடல்களனைத்திலும் தண்ணீரொன்று தான் மிஞ்சியிருக்குமெனக் கருதப் படுமாம். [1]

---

செய்யப்பட்ட ப்ரக்ஷிப்தமான பத்தியங்கள் நிர்ணயஸாகர புஸ்தகத்திலும், தெலுங்கு முதலிய வேறு லிபிகளிலுள்ள அனேக புஸ்தகங்களிலும் காணப்படும்.]

1. ஸமுத்திரத்தில் நல்முத்து முதலியவை யுற்பத்தியாவதால், அதை ரத்நாகரம் என்று கூறுவர்; இங்கு கடைவீதியில் அளவிறந்த இரத்தினக்குவியல்களைப் பார்த்தால்

* ‡ அவ்விடத்திய விசேஷ வரலாறுகளறிந்த நகரத்து ஜனங்கள், "வத்ஸராஜன் ப்ரத்யோதனது ப்ரியமகளை இவ்விடத்தில் அபஹரித்தனன்; அவ்வரசனுக்கே இவ்விடத்திற் பொன்மயமான பனங்காடொன்று இருந்தது; இங்கு நளகிரி யென்கிற மத்த கஜமொன்று பெருந் தூணைப் பெயர்த்துக்கொண்டு ஓடித் திரிந்தது" எனக் கூறி, வெளியூர்களிலிருந்து வரும் தமது உறவினர்களைக் களிக்கச் செய்கின்றனர்.

* ‡ ஆங்குள்ள அச்வங்கள், பச்சிலையைப் போல் பசுமை நிறங்கொண்டு, கதிரவனது குதிரைகளிடம் பொறாமையுடன் அவற்றை வெல்லக்கூடியன; கஜங்களோ, மதங்கொண்டவையாய் நின்றனக்கேற்ப மத நீராகும் மழையைச் சொரிந்துகொண்டு மலைகளைப் போல் மிகவுமுயர்ந்திருக்கும்; போர்வீரர்களோ, யுத்தங்களில் வாள்கள் தாக்கியதாலுண்டான விரணக் குறிகளை யலங்காரமாகப் பெற்று வேறு ஆபரணங்களாலுண்டாகும் பொலிவைப் புறக்கணித்தவராய் இரணகளத்தின்கண் இராவணனையும் எதிர்த்து நின்றுப் போர் புரிய வல்லவர்.

## இரண்டாம் ஆச்வாஸத்தில்

(2, 3 வது ச்லோகங்களுக்கு இடையிலுள்ள 2 பத்தியங்கள்.)

* ‡ அவ்வளகையின்கண், மரங்கள், என்றைக்

---

ஸமுத்திரத்தில் நல்முத்து முதலிய இரத்தினங்களெல்லாம் செலவழிந்து, கேவலம் நீர் நிரம்பிய கடலாக இருப்பதாக மட்டும் நினைக்கப்படுமாம்.

கும் மலர்களால் நிறைந்தவைகளாய், நன்கு மதங் கொண்டு சப்திக்கும் வண்டுகளுடன் கூடியிருக்கின் றன; தாமரை யோடைகள், எப்பொழுதும் கமலமலர் களைப் பெற்று, அன்னப்பறவைகளின் பந்திகளால் சூழப்பெற்றுள்ளன; அகத்திலுள்ள மயில்கள் எக்கால மும் விரிவான தோகைகளுடன் விளங்கியவையாய் அகவல் பாட ஆவல் கொண்டுள; அந்திப்பொழுதுகள் என்றைக்கும் நிலவினுல் விளங்கி, இருள் பரவுவதைப் போக்கி மிகவுமழகாய் பிரகாசிக்கின்றன.

* ‡ ஆங்கு, செல்வஞ் செழித்த அவ்வியக்கருக்கு ஆனந்தத்தால் கண்ணீருண்டாகுமேயன்றி, வேறெக் காரணங்களாலுமன்று; மனதுக்கினிய மனைவி அல்லது மணாளரது சேர்க்கையினுலேயே போக்கக் கூடிய மன் மததாபமின்றி, மற்றொரு தாபமும் கிடையாது; மிகவு மன்புடன் போலிக்கலஹத்தினுற் பிரிவுறுவதைத் தவிர்த்து வேறெவ்விதப் பிரிவும் தம்பதிகளுக் கேற் படுவதில்லை; யௌவனப்பருவமன்றி, பிறிதோர் வய தும் அவர்களுக்குக் கிடையாது.

(3, 4 வது பத்தியங்களுக்கு இடையில்)

* ‡ அவ்விடத்தில், அமரரால் விரும்பத் தகும் அழகு பொருந்திய கன்னிகைகள், கங்கையின் நீர்க ளால் குளிர்ச்சியான மாருதங்கள் மேனியின்மீது மெல் லென வீச, அவ்வாற்றங்கரையில் முளைத்த கற்பக விருக்ஷங்களின் நிழலால் வெப்பம் நீங்கியவராய், கனக மயமான மணற்குவியல்களில் இரத்தனங்களை மறைத்து

வைத்துத் தேடிய வண்ணம் விளையாடிக் கொண்டிருப்பர்.[1]

(6, 7, வது பத்தியங்களுக்கு இடையிலுள்ள 3 ச்லோகங்கள்)

* ‡ அவ்வளகையில், அங்கங்களுக்குள் என்றைக்கு மழிவுரு நிலைமையிலுள்ள நிதிகளைப் பெற்றவரான காமுகிகள், தேவதாஸிகளான அப்ஸரஸ்திரீகளைத் துணையாகக்கொண்டு, செல்வத்திற்கதிபதியான குபேரனது புகழை இனிய தொனியுடன் கணீரெனப் பாடும் கின்னரருடன் கூடியவராய், வெளிப்புறத்திலுள்ள வைப்ராஜமென்னும் உத்தியானவனத்தின்கண்[2] ஒருவருக்கொருவர் ஸல்லாபம் செய்துகொண்டு இன்பமனுபவிக்கின்றனர்.

* ‡ அந் நகரத்தினில், சிற்றின்பத்திற் பற்றுள்ள வனிதைகள் தமது ஆசைநாயகரிருக்குமிடம் சென்று வந்த வழியான்து, அவர்கள் நடக்குங்கால் சிறிது உடல் நடுங்க அதனால் கூந்தல்களிலிருந்து வீழ்ந்த மந்தாரமலர்களாலும், அவரது செவிகளிலிருந்து நழுவிய கமலமலர்களென்ன தளிர்களின் துண்டுகளென்ன இவற்றாலும், ஸ்தனங்களுக்கருகில் அறுபட்ட ஹாரங்களிலிருந்து இறைந்த முத்துகளா

1. சிறுவர், சிறு குச்சிகளை மணற் குவியல்களில் மறைத்து வைத்துத் தேடும் விளையாட்டுக் கிராமங்களில் இப்பொழுதுமுண்டு; இவ்விதமே குப்தமணி (மணியை மறைத்துத் தேடும்) என்கிற ஆட்டமும் என்றறிக.

2. சிவனது பிரமதகணத்தில் ஓர் அதிகாரியான விப்ராஜன் என்பவனால் காக்கப்படும் உத்தியானவனம் வைப்ராஜம் எனப் படும்; என்று சம்புரஹஸ்யம்.

லும் ஸூரியோதயவேளைகளில் அறிவிக்கப்படுகின்றது.[1]

* ‡ ஆங்கு, பலவர்ணமுள்ள ஆடைகளென்ன, நேத்திரங்களுக்குப் புருவ நெறிப்பு முதலிய விலாஸங்களை யுபதேசிக்கும் வல்லமை வாய்ந்த மதுவென்ன, தளிர்களுடன் மலர்ந்தெழும் அழகிய மலர்களென்ன, பற்பல வகையான ஆபரணங்களென்ன, பாதாரவிந்தங்களிற் பூசுவதற்கேற்ற செம்பஞ்சுக் குழம்பென்ன— இவ்விதமான ஆடவருக்கு அழகளிக்கும் அலங்காரங்கள் அனைத்தையும் கற்பகவிருக்ஷமொன்றே உண்டாக்குகின்றது.

(38, 39 வது பத்தியங்களுக்கு இடையில்)

*வாலிபப் பருவத்தைப் பெற்று அழகாய் விளங்கும் அருமை நாயகியே! மெல்லிய மழைத்துளிகளால் நனைந்த மேதினியைப் போல் நறுமணம் கமழும் நினது முகத்தைக் காணுமல், நெடுந்தூரத்திலிருந்து மிகவும் இளைத்திருக்கும் என்றனை இன்னும் இம் மன்மதன் வருத்திச் சிதைக்கின்றனே! மேலும், இம் மாரிகாலத்தினில், திசைகள் தோறும் நெருங்கிப் பரவிய கார் முகில்களால் மறைவுற்ற ஸூரியகிரணங்களையுடைய இந் நாட்களை நான் எங்ஙனம் கழித்திடுவேன்?[2]

---

1. அந் நகரத்தினில்...என்கிற இவ் வாக்கியத்திற்கு ஆதாரமான ச்லோகத்துக்கு வல்லபதேவனுலும் வியாக்கியானம் வரையப்பட்டிருக்கிறது.

2. வடமொழியில் இதற்காதாரமான ச்லோகத்தை நிர்ணயஸாகார—மேகஸந்தேசத்தில் 79 வது பக்கத்தின் கீழ் வரிசையிற் காண்க.

(45, 46 வது பத்தியங்களுக்கிடையில்)

* ‡ அப்பா! முதல் விரஹத்தினால் மிகத் துயர முறும் எனது தோழியை இங்ஙனம் தேற்றிய பின், முக்கண்ணனது விருஷபத்தினால் கொந்தி வீழ்த்தப் பெற்ற சிகரத்தையுடைய அப் பர்வதத்தினின்றும் திரும்பி, அறிகுறிகளுடன் கூறியனுப்பிய அவளது க்ஷேமஸமாசாரங்களையுமறிந்து வந்து, காலையில் மலரும் குருக்கத்திமலர்போல் எளிதிற் சிதையுறும் நிலைமையிலுள்ள எனதுயிரையும் நீ நிலை நிறுத்தக் கடவாய்.

(47 வதுக்குப் பிறகு இறுதியிலுள்ள 3 ச்லோகங்கள்[1])

* இஷ்டம் வாய்ந்தவிதம் வடிவமெடுக்கவல்ல அவ்வம்புதமானது, அப்பால், அந்த இராமகிரியிலிருந்து விரைவாக அளகாபுரியடைந்து, அங்ஙனம் அவ்வியக்கனால் வர்ணிக்கப் பெற்ற அவனது மாளிகை, முன் பார்த்ததற்கு மாறாகப் பெரும்பாலும் ஒளிமழுங்கிக் கிடக்கக் கண்டு, அவ்வியக்கன் பெருமுயர்ச்சியுடன் அன்பமர்ந்து மொழிந்த செய்தியனைத்தையும் அவனது மனைவியினிடம் கூற முயன்றது.

*மானிடருக்கு நன்மை செய்வதிற் கருத்துள்ளதும், மேலான மஹிமைவாய்ந்ததுமான அம் மேகமானது, அவ்வியக்கன்மனைவியினது உயிரைக் காக்க, வானவருக்கேற்ற வாக்கைக்கொண்டு அவளிடம் அனைத்தையும் உரைத்தது; அவளும், தன் கணவனது

1. இவற்றின் மூலச்லோகங்கள் மூன்றும் நிர்ணயஸாகர புஸ்தகத்தில் 87 வது பக்கத்தில் அடியில் வரிசையாக வரையப்பட்டிருக்கின்றன.

செய்தியறிந்து இன்பமுற்றிருந்தனள்; உத்தமரிடம் செய்துகொண்ட வேண்டுகோள், எவருக்குதான் தாம் விரும்பிய வண்ணம் பயனளிக்காதிருக்கும்?

*குபேரனும், அப்பொழுதே, மேகம் மொழிந்த அச் செய்தியைச் செவியுற்றுச் சினந்தணிந்து மனமிரங்கியவனாய், சாபத்திற்கு முடிவையுமேற்படுத்தி, யக்ஷதம்பதியான அவ்விருவரையும் பிரிவின்றித் துயரமற்று மனங்களித்து அடிக்கடி அளவிறந்த இன்பங்களனுபவித்தவண்ணம் இருக்கச் செய்தனன்.



# அநுபந்தம் 2.

**யக்ஷன் மேகத்திற்குக் கூறிய பாதைகளிலுள்ள பர்வதம், நதிகள், நகரங்கள் முதலியவற்றைப் பற்றிய விவரங்கள்.**

*[பண்டைக்காலத்தில் வழங்கிய அடியிற் கூறப்படும் பிரதேசங்களின் பெயர்களும், அவற்றினுருவங்களும் பெரும்பாலும் பலவாறு மாறியிருக்கின்றனவாதலால், காளிதாஸனுரைத்துள்ள ஒவ்வோரிடமும் இதுதான் என்று நிச்சயமாகக் குறிப்பிடுவது மிகவும் கஷ்டஸாத்தியமென்றாலும், அனேக ஆராய்ச்சிகளால் அவற்றைப்பற்றிய விவரங்கள் இங்கு குறிக்கப்படுகின்றன.]*

**அவந்தீ:**—நர்மதாநதிக்கு வடக்கிலும், அரவல்லி மலைக்குத் (திரிகூடமென்றும் சிலர் இதைக்கூறுவர்) தெற்கிலுமுள்ள ஓர் தேசம்; இதற்கு உஜ்ஜயினீ இராஜதானியாயிருந்தது. இது அவந்தீபுரீ அல்லது விசாலா என்றும் கூறப் படும். இத் தேசத்திற்கருகில் சிப்ராநதி ஓடுகின்றது. மஹாபாரதகாலத்தில், இத் தேசம் தெற்கில் நர்மதாநதிக்கரைகள் வரையிலும், மேற்கில் மஹி (Mahi) என்கிற நதியின் தீரங்களளவும் பரவியிருந்தது. நன்கு நிதானித்து நோக்குங்கால் மாளவபீடபூமியின் மேற்குப் பகுதியே (Western Part of the Malwa Plateau) இத் தேசமென்றறியப்படுகின்றது.

**அளகாபுரீ:**—இஃது யக்ஷேச்வரனை குபேரனுக்கு

இராஜதானி யென்றும், கைலாஸகிரியின்மீது இருப்பதாகவும் காவியங்களிலும் புராணங்களிலும் கூறப்படுகின்றது. இப்பொழுது இமயமலையிற் கைலாஸமென்று சொல்லப்படுகிறவிடத்தில் சிற்ருறு ஒன்று உற்பத்தியாய்,கங்கைக்கு முதல் உபநதியாக அத்துடன் சேருகின்றது; அதற்கு அளகநந்தை யெனப் பெயர். அந்த உற்பத்தியாகுமிடமோ, அதன் ஸமீப பிரதேசமோ அளகையாயிருக்கவேண்டும்; அளகை யீதவர் வஸிக்குமிடமாதலால் நமக்குப் புலப்படவில்லை யெனக் கூறலாம்.

**ஆம்ரகூடம்:**—மாமரங்களை அடர்த்தியாகப் பெற்றதால் இம் மலைக்கு 'ஆம்ரகூடம்' என்று பெயர் வந்தது. நர்மதாநதிக்கு ஸமீபத்திலுள்ள இக் குன்று இப்பொழுது அமர்கண்டக் (Amarkantak) என்று ஸாதாரணமாய் வழங்கப் பெற்றுவருகின்றது. இக் குன்றுக்குத் தெற்கில் ஓர் உயர்ந்த பூமியில் மஹாநதீ என்கிற பிரஸித்தமான ஆறு உற்பத்தியாகின்றது.

**இமயமலை:**—இப்பாரததேசத்திற்கு வடக்கெல்லையாகவும், பனிக்குஇருப்பிடமாகவும், ஆகாயத்தைஅளாவியதாய் உலகிலுள்ள பர்வதங்களுக்குள் மிகவும் உன்னதமுமான இம் மாமலை மிகப் பிரஸித்தமானது.

**இராமகிரி:**—ஸ்ரீராமன் வனவாஸம் செய்கையில் அவர் தங்கியிருந்த எந்த மலைக்கும் இப் பெயர் வழங்கலாம். ஆனல் சித்திரகூடபர்வதமே அவற்றுள் மிகவும் புகழ் பெற்றது; ஏனெனில் அவர் கானகமேகியதும் முதலிற் சித்திரகூடத்தில்தான் வாஸம் செய்தனர்.

சித்திரகூடமென்பது, இப்பொழுது மத்திய இந்தியா வில் (Central India), பண்டல்கண்ட் (Bundel khund) என்னுமிடத்தில் காம்ப்டா (Comptah) என்பதாகக் கூறப்படுகின்றதாம். இவ்விடம் இன்றைக்கும் புண்ணிய க்ஷேத்திரமென்று கருதப்பெற்று வருகின்றது. பிறகு கூறப்படும் மார்க்கங்களிலுள்ள இடங்களை ஆலோசித்தால், சித்திரகூடந்தான் இங்கு இராமகிரியெனப் படுவதாக நினைக்க முடியாது; பிறகு வர்ணிக்கப்படும் பிரதேசங்கள் சில சித்திரகூடத்திற்குத் (Comptah) தெற்கே யிருக்கின்றன. ஆகையால் நாகப்பூருக்கு (Nagpur) அருகிலுள்ள கைமூர் என்கிற பிரதேசத்தின் (Kaimur Range) ஓர் பகுதியான இராம்டேக் (Ramtek) என்று இப்பொழுது வழங்கப் படும் குன்றமே இராமகிரியெனக் கருதவேண்டி யிருக்கின்றது. இவ்விடம் நாகப்பூருக்குச் சிறிது வடக்கிலுள்ளது. ஸ்ரீராமன், ஸீதையுடனும் இலக்ஷ்மணனுடனும் தென்தேசத்தைநோக்கிச் செல்லுங்கால், இராம்டேக் (இராமகிரி) என்கிற அக் குன்றிற் சிறிது காலம் தங்கியிருந்ததாகக் கூறி, அவ்விடத்தியவர், ஸ்ரீராமன் முதலியவர்களுக்கு இப்பொழுதும் அங்கு உத்ஸவாதிகளை நடத்திவருகின்றனராம்.

**உஜ்ஜயினி**:—இதற்கு விசாலா என்று மற்றொரு பெயருண்டு. இந் நகரம் பண்டைக் காலமுதல் இதுகாறும் புண்ணிய க்ஷேத்திரமென்று வெகு புகழ்பெற்றிருக்கின்றது. இது அவந்திதேசத்திற்கு முக்கிய பட்டணமென்று மொழியப்பட்டிருப்பினும், மாளவ தேசத்திற்கு இராஜதானியாயிருந்ததென்றும் கூறப்

படுகிறது. இதற்குக் காரணம், மாளவதேசம் மிக விரிந்து அவந்தியை முக்காற் பங்குச் சூழ்ந்திருந்ததால், அவந்தியின் பெயர் மறைவுற்று மாளவமே பலவகையில் முதன்மை பெற்று, உஜ்ஜயினியும் அதற்கே இராஜதானியென்று வழங்கப்பட்டது போலும். முன்னால் இஃது விக்கிரமாதித்தியன் முதலியவர்களால் ஆளப் பெற்று வந்தது. மஹாராஜாஹோல்காருக்கு முக்கிய வாஸஸ்த்தலமான இந்தூர் (Indore) என்கிற நகரத்திற்கு வடக்கில் இப்பொழுதும் உஜ்ஜயினீ (Ujjain) என்னும் அதே பெயருடன் விளங்குகின்றது.

**கங்காநதீ:**—இமயமலையின் தென் சாரலில், கார்வால் ரேஞ்ஜ் (Gharwal Range) என்னும் பிரதேசத்தில், பனிக்கட்டிக்குவியல்களைப் பெற்ற கங்காத்வாரம் அல்லது கங்கோத்ரி (Gangodri-Glacier) என்கிற இடத்திற் கிளம்பி, அளகநந்தை யென்னும் உபநதியுடன் முதலிற் கலந்து, இமாலயத்தை விட்டு வெளி வந்து, ஹரித்வாரம் வழியாகத் தென்திசை நோக்கி வெகு செழிப்பான ஸமவெளிகளில் வீழ்ந்துச் சென்று, அங்கிருந்து சிறுகச் சிறுகக் கிழக்காகத் திரும்பி, இராஜமஹால் குன்றுகளைச் (Rajmahal hills) சுற்றிக்கொண்டு, பிரயாகை (Allahabad) முதலியவிடங்களில் யமுனை, சோணம் முதலான பல நதிகளை உபநதிகளாகப் பெற்று, இறுதியிற் பிரம்மபுத்திரா என்னும் மஹாநதியுடன் கூடி, மஹோநதியென்னும் வங்காளவிரிகுடாவில் விழும் இது மஹாபுண்ணியநதியென்று நமது தேசத்தில் மிகவும் புகழ் பெற்றுளது.

**கந்தவதீ**:—உஜ்ஜயினிக்கு அருகிலுள்ள ஒரு சிறு காட்டாறு. இப்பொழுது, பார்வதீ (Parbati) என்கிற ஆற்றுக்குக் கிழக்கில் குன் (Kunn) என்று வழங்கப்படுவதும், அதற்குமேற்கில் களிஸிந்து(Kali-Sindh) எனக்கூறப் படுவதுமான சிற்றாறுகளோ, அல்லது அவற்றிற்கு அருகிலிருக்கும் வேறு ஏதேனும் காட்டாறோ இவ்விதம் கந்தவதியெனப் படுவதாக ஊஹிக்க வேண்டியிருக்கின்றது.

**கம்பீரா**:—விந்தியமலையின் வடபாரிசத்திலுண்டாய், வடதிசைநோக்கி ஓடி யமுனையுடன் சேரும் கென் (Ken) என்று இப்பொழுது வழங்கப்படும் நதியெனத் தோற்றுகிறது.

**கனகலம்**:—ஹரித்வாரத்திற்கு வடக்கில், கங்காநதி இமாலயத்தைவிட்டுக் கீழிறங்குமிடத்திலுள்ள ஒரு பிரதேசம்; அங்குள்ள ஒரு தீர்த்தத்திற்கும் கனகலம் எனப் பெயராம். ஸேவாலிகாமலைத் தொடருக்குத் (SewalikaMountains) தெற்கில் இப் பெயர் கொண்ட ஒரு கிராமமு முண்டு. எந்த மூடந்தான் இந்த தீர்த்தத்தில் நீராடி முத்திபெறமாட்டான் (கல: கோ நாம முக்திம் வை பஜதே நாத்ர மஜ்ஜநாத்। அத: கநகலம் தீர்த்தம் நாம்நா சக்ரு: முநீச்வரா:) என்று கூறி, முனிவர் இதற்குக் 'கனகலம்' எனப் பெயரிட்டதாக, கங்காத்வாரமாஹாத்மியத்தில் மொழியப் பட்டிருக்கின்றது.

**கிரௌஞ்சபர்வதம்**:—பூதன் (Bhutan) என்கிற ஓர் இராஜ்யத்திற்கும் (நேபாளத்தைப்போல் அதை

விடச் சிறிது குறுகிய ஸ்வதந்திரம் பெற்ற இராஜ்யம்), நேபாளத்திற்கும் இடையிலுள்ள ஸிக்கிம் (Sikkim) என்கிற பர்வதப்ராந்தத்தின் ஒரு பகுதியான கஞ்சஞ்ஜங்க (Kanchanjang) என்னும் குன்றமாயிருக்க வேண்டும்; இமாலயத்தில் மஹா உன்னதமானதெனக் கூறப்படும் மௌண்ட் எவரஸ்டு (Mt. Everest) என்கிற சிகரத்திற்குச் சிறிது கிழக்கில் அதைவிடச் சற்றுச் சிறியதான இதன் சிகரம் வெகு விசாலமாயும் கம்பீரமாயுமிருக்கும். இங்கிருக்கும் ஒரு கணவாயினூடே இமாலயத்தைக் கடந்து, திபேத் நாட்டிற்கு ஜனங்கள் வியாபாரத்தின் பொருட்டுப் போய் வருகின்றனர். ஸுப்பிரமணியன், கிரௌஞ்சன் என்கிற அஸுரனை இவ்விடத்தில் வதை செய்ததால் இம் மலைக்கும் கிரௌஞ்சமென்று பெயரிடப் பெற்றது என்று மிருகேந்த்ரஸம்ஹிதையிற் கூறப்படுகிறது.

**குருக்ஷேத்திரம்:**—சந்திரவம்சத்திற் பிறந்து அருந்தவம் புரிந்த குரு என்னும் மன்னன் ஆண்டதால் இப் புண்ணியபூமிக்கு குருக்ஷேத்திரமெனப் பெயர் வந்தது. இவ்விடத்திற் பரசுராமன், க்ஷத்திரியர்களை 21 தலைமுறையளவும் தனது கோடரிக்கு இரையாக்கி, அவ்வரசரது இரத்தங்களால் ஸமந்தபஞ்சகம் என்கிற ஐந்து மடுக்களை யுண்டாக்கினரென்றும், அது முதல் இந்த க்ஷேத்திரம் ஸமந்தபஞ்சகம் எனப் படுவதாகவும் கூறப்படுகின்றது. இவ்விடத்திற் போர் செய்து மாண்டுபோகும் க்ஷத்திரியருக்கு மோக்ஷம் கிடைக்கின்றதாம். ஆகையினாற்றான் குருபாண்டவர் இங்கு மஹத்தான பாரதயுத்தத்தை நடத்தினார்

களாம். இந்த டெல்லிக்கு அருகில் தனேச்வர (Thanesar) என்கிற ஊருக்குச் சிறிது தென் கிழக்கில் இப் பொழுதும் இப் பெயருடனே விளங்குகின்றது. இது மிகவும் புண்ணியக்ஷேத்திரமென்று நமது தேசத்தில் இன்றைக்கும் அனைவராலும் கருதப்பெற்று பிரஸித்தமாயிருக்கின்றது.

**கைலாஸபர்வதம்:**—இந்த இமாலயத்தின் பின்புறத்திலுற்பத்தியாகும் ஸிந்துமஹாநதிக்கு (River Indus) வடகரையிலிருந்து, காச்மீரநாட்டைக் குறுக்காகக் கிடந்து, வடமேற்கிலிருந்து தென்கிழக்காக நீண்டிருக்கின்றது. இந்த மலையைக் குபேரனுக்கும் முக்கியமாய் சிவபெருமானுக்கும் பிரதானவாஸஸ்தலமென்று நமது தேயத்தார் கருதுகின்றனர். இந்த மலையின் சார்பிலிருந்தே பிரம்மபுத்திரா என்னும் மஹாநதி உற்பத்தியாகின்றது. இதற்கு இப்பொழுதும் கைலாஸம் அல்லது காங்கரிமலைத்தொடர் (Kailas or gangri mountains) எனப் பெயர் வழங்கப்படுகிறது.

**சர்மண்வதீநதி:**—இந் நதி விந்தியபர்வதத்தின் வடபாரிசத்திலுற்பத்தியாய், முதலில் மாளவதேச பீடபூமியின்மீது (Malwaplateau) நேர் வடக்காகவும் பிறகு சிறிது வடகிழக்காகவும் திரும்பி, இராஜபுதன நாட்டின் கிழக்கு முனையில் மத்தியஇந்தியாவுக்கு மேற்கெல்லையாக ஓடி, கான்பூருக்குச் சிறிது வடமேற்கில் யமுனைக்கு உபநதியாக அத்துடன் கூடுகின்றது. சிப்ரா, பார்வதீ (Parbati), கலிஸிந்து முதலிய பல

சிற்ருறுகள் சர்மண்வதிக்கு உபநதிகளாயிருக்கின்றன. இப்பொழுது இந் நதி சம்பல் (River chambal) என்று வழங்கப்படுகிறது.

**சிப்ராநதீ:**—இஃதோர் சிற்ருறு; விந்தியமலையின் வடசாரலில், சர்மண்வதியுண்டாகும் இடத்திற்குச் சிறிது கீழ்த் திசையில் உற்பத்தியாய் வடக்காக ஓடி, சர்மண்வதியுடன் கூடுகின்றது. இதன் கரையில்தான் உஜ்ஜயினீநகரம் இருக்கின்றது.

**தசபுரம்:**—இது மாளவதேசத்திற்கு வடக்கில், இராஜபுதனநாட்டிற்கு நேர் கிழக்கில், சர்மண்வதீநதி இராஜபுதனநாட்டை விட்டு விலகுமிடத்தில் அந் நதிக் கரையில் இருந்ததாகத் தெரியவருகிறது; இப்பொழுது ஆங்கு தோள்பூர் (Dholpur) என்று வழங்கப் படும் ஜாட்ஸம்ஸ்த்தானத்தின் (Jat state) முக்கிய நகரமே தசபுரமாயிருக்குமெனக் கருதப்படுகிறது. முன்னல் தசபுரம் இரந்திதேவனுக்கு இராஜதானியாயிருந்தது. ஆகையால் இரதன்பூர் (Rutanpur) என்று இப்பொழுது வழங்கப்படும் ஊரே தசபுரமாயிருக்கக் கூடுமென்று வில்ஸன்துரைகூறுகிருர்.

**தசார்ணம்:**—முற்காலத்தில் இஃது ஒரு தேசத்தின் பெயராயிருந்தது. இவ்விடம் இப்பொழுது மாளவதேசத்திற்குக் கிழக்கிலிருப்பதாகத் தெரியவருகிறது. இஃது இப்பொழுது மத்தியமாகாணத்தில் (Central provinces), சடிஸ்கார் (Chhatisgarh) என்கிற ஸமவெளிப் பிரதேசமாயிருக்கவேண்டும். முன்பு இதற்கு விதிசாநகரம் இராஜதானியாயிருந்தது.

இத் தேசம் விந்தியத்திற்குச் சிறிது கிழக்கிலுள்ள தென்று ப்ருஹத்ஸம்ஹிதையென்னும் கிரந்தத்திற் கூறப்படுகின்றது. தசார்ணதேசத்தின் மேற்குப் பகுதியில் தசார்ணம் என்கிற ஒரு நதியுமுண்டு. இப்பொழுது யமுனையாற்றுக்கு உபநதியாயிருக்கும் தசன (Dasan) என்பதே தசார்ணநதியெனத் தோற்றுகிறது.

தேவகிரி:—மாளவதேசத்திற்கு மத்தியில், சர்மண்வதிநதிக்குத் தெற்கிலுள்ள ஒரு குன்று; இப்பொழுது இம் மலை தேவகர் (Dewagar) என்று வழங்கப்படுகிறதாம், இங்கு சுப்பிரமணியதேவாலயம் ஒன்றுண்டு; இன்றைக்கும் இத் தேவாலயம் சிறபபுற்றிருக்கின்றதாம்.

நர்மதாநதீ:—விந்தியத்திற்குஅருகில் ஆம்ரகூடத்தின் சாரலில் (Amarkantakrange) உற்பத்தியாய், விந்தியபர்வதத்திற்கும் சதபுரமலைத் தொடருக்கும் (Satpura hills) இடையிலுள்ள பெரிய படுகை நிலததினூடே நேராய் மேற்காக ஓடி, அரபிக்கடலென்னும் மேற்கு ஸமுத்திரத்திற் கலக்கும் இந் நதி இத் தேசத்தில் புண்ணியநதி யென்று மிகப் பிரஸித்தி பெற்றிருக்கின்றது. கிழக்கிலிருந்து மேற்காக ஓடும் இதைப் போன்ற ஆறுகள் 'நதம்' எனப் படுகின்றன. இதற்கு ரேவா என்று மற்றொரு பெயருண்டு. இஃதுண்டாகுமிடத்திற்கு வடக்கில் இப் பெயருடன் (Rewah-ரேவா) ஒருஸம்ஸ்த்தானம் இப்பொழுது முண்டு.

நிர்விந்தியாநதீ:—விந்தியமலையிலிருந்து உற்பத்தி

யாரும் ஓர் சிற்ருறு. சர்மண்வதிக்கு உபநதிகளான சிப்ரா, பார்வதி இவற்றிற்கு இடையிலுள்ள ஒரு சிறிய நதியா யிருக்கவேண்டும்.

**நீசைர்க்கிரி:**—நீசைர்க்கிரி என்ருல் ஓர் சிறு மலையெனப் பொருள். இது விதிசாநகரத்திற்கு அருகிலுள்ள ஒரு சிறு குன்ருயிருக்கவேண்டும். (இதற்குப் பிறகு 26-வது பத்தியத்திற் கூறப்படும் காட்டாறுகள் என்பவை, சிப்ராநதிக்கும் தசார்ணநதிக்கும் (River Dasan) இடையில் விந்தியத்திலிருந்தோடும் அனேக சிற்ருறுகளெனத் தோற்றுகிறது; அவற்றுள் பார்வதீ, கலிஸிந்து, கலிபர்வன், விதிசா (River Beas) முதலியவை முக்கியமான சிறுநதிகள்.)

**பிரம்மாவர்த்தம்:**—ஆர்யாவர்த்த (விந்திய இமாலயங்களுக்கு நடுவிலுள்ள) தேசத்தின் கீழெல்லையையுண்டாக்குவதான திருஷத்வதீநதிக்கும், ஸரஸ்வதீ நதிக்கும் (இவ்விரண்டும் அந்தர்வாஹினிகள்-ஸரஸ்வதீ நதியின் விவரத்தைப் பார்க்க.) இடையிலுள்ள ஓர் பிரதேசம். இவ்விடம் மஹாபரிசுத்தமானதென்றும், இத் தேசத்திலுண்டான ஆர்யர்கள் அனேகசரித்திரஸம்பந்தமான விஷயங்களை வெளியிடுவரெனவும், இதற்கப்பால் வடக்கில் குருக்ஷேத்திரம், மத்ஸியதேசம், பாஞ்சாலம் முதலியவை இருக்கின்றனவென்றும் மனுவும் கூறுகிருர். அதாவது இராஜபுதனநாட்டிலுள்ள பாலைவனம் (Sandy Desert) எனத் தோற்றுகிறது. அந்த ஸமவெளியில் நீராவது நிழலாவது கிடையாது. அங்கு நதி மலை முதலியவை யில்லாததாற்ருன், அவ்விடத்தில் கீழிறங்காமற் கடந்து

போய்க் குருக்ஷேத்திரம் நோக்கி ஏகுமாறு மேகத்தை நோக்கி யக்ஷன்கூறுகிறுனென்க. இவ்விடத்தின் ஒரு பாரிசமே முன்னுல் 'நைமிசாரண்ணியம்' என்று வழங்கப்பட்டதென்று சிலரெண்ணுகின்றனர்.

**மஹாகாலக்ஷேத்திரம்:**—உஜ்ஜயினிக்கு மிகவும் அருகிலுள்ள ஓர் சிறப்புற்ற சிவக்ஷேத்திரம். அங்குள்ள சிவபெருமானுக்கு மஹாகாலன் எனப் பெயராதலால், அவ்வாலயத்திற்கும், க்ஷேத்திரத்திற்கும் கூட மஹாகாலம் என்றே பெயர் வழங்கலாயிற்று. இதற்கு ஸமீபத்தில் கந்தவதீ (பெரும்பாலும் கலிஸிந்து அல்லது கன் என்று தற் காலத்தில் வழங்கப் படும் சிற்ருறுகளில் ஒன்று) என்கிற நதியொன்றுண்டு.

**மாலம்:**—இஃதோர் மலைபிரதேசம். சிறிது மேற்காகச் சென்று உடனே வடக்காகத்திரும்பி ஆம்ர கூடம் போகுமாறு மேகத்திற்கு உபதேசிக்கப்படும் மார்க்கத்தை நோக்குங்கால், வடக்கே மால்டாஜில்லாவுக்குச் (Malda District) சிறிது தெற்கிலுள்ள இரதன்பூருக்குச் (Ratunpur) சற்று வடக்கில் அதைச் சார்ந்ததோர் மலைபிரதேசமாயிருக்கவேண்டுமெனத் தோற்றுகிறது. உன்னதமான பிரதேசம் அல்லது பீடபூமிக்கு மாலம் எனப் பெயராம்.

**மானஸஸரஸ்:**—இது இமாலயத்தினிடையில் உன்னத பிரதேசத்தில் திபேத்நாட்டிற்கு அருகிலிருக்கின்றது. இப்பொழுதும் இதற்கு மானஸஸரோவரம் (Mana sarowar) என்பதாகவே பெயர்வழங்கப் படுகின்றது. இங்கிருந்து மானஸமென்கிற நதியும் ஒன்று ஓடுகின்றது. மானஸத்திற்கு மிகவும் அருகில்

தான் பிரம்மபுத்திரா என்கிற பெரிய நதி உற்பத்தியாகின்றது. இக் குளத்திற்கு ஸமீபத்தில் ஹாடகம் என்று (இப்பொழுது லாடாக்-Ladakh-என்று வழங்கப் படுகிறதாம்) பிரஸித்தமான பிரதேசமொன்றுண்டு.

**விதிசாநகரம்:**—முற்காலத்தில் தசார்ணம் என்று வழங்கப்பெற்ற தேசத்திற்கு இராஜதானியாயிருந்த இந் நகரமே, இப்பொழுது மத்திய இந்தியாவில் பில்ஸா (Bhilsa) என்று கூறப்படுவதாகத் தெரிய வருகிறது. இது வேத்திரவதீ என்கிற நதிக்கரையில் அமைந்துள்ளது. விதிசைக்கு அருகில் பல கோயில்களும், பௌத்தாலயங்களும் (இவற்றுள் ஸஞ்சிதோப் (Sanchitope) என்கிற பௌத்த ஸ்தலம் பெயர்பெற்றது) இப்பொழுது பிரஸித்தமாயிருக்கின்றன.

**விந்தியபர்வதம்:**—இப்பொழுது மத்திய இந்தியாவுக்கு ஒருவாறு தெற்கெல்லையாகவும், டெக்கான் என்கிற தக்ஷிணதேசத்திற்கு வடக்கெல்லையாகவுமமைந்து, கிழக்கு மேற்காக நீண்டிருக்கும் இப் பர்வதம் மிகவும் பிரஸித்தமானது.

**வேத்திரவதீநதி:**—இது விந்தியமலைத் தொடரின் வட பாரிசத்திலுற்பத்தியாய், அங்கிருந்து வடகிழக்காக 340 மயில்தூரம் ஓடி, மாளவதேசத்தையும், பிரயாகையின் (Allahabad) தென்மேற்கு மூலையையும் குறுக்காகக் கடந்து, காலபீ (Kalpee) என்கிற பட்ட

ணத்திற்கு ஸமீபத்தில் யமுனையாற்றில் வீழ்கின்றது. இதற்கு இப்பொழுது பீட்வா (River Betwa) எனப் பெயர் வழங்கப்படுகின்றது.

**ஸரஸ்வதீநதி**:—இது, ஸிந்துமஹாநதியின் (River Indus) உபநதிகளுள் வெகு முக்கியமான சதத்ரு (Sutlej) என்கிற பெரிய நதிக்குக் கீழ்த் திசையாக இமயமலையின் தென் சாரலில் உற்பத்தியாய், தெற்கு நோக்கிக் குருக்ஷேத்திரத்திற்குத்தென்மேற்காயோடி, இராஜபுதனநாட்டிலுள்ள பெரிய மணற்பாங்கான ஸம வெளியில் வற்றிப்போய் முடிவு பெருகின்றது; மாரிகாலம் தவிர்த்து மற்றக் காலங்களில் இப்பொழுது இவ் வாற்றில் நீரிருப்பதில்லை. யமுனைக்கு மேற்கில் கக்கர் (Ghaggar) என்கிற மற்றொரு நதியுமுண்டு; இதற்கே முன்னால் திருஷத்வதீ என்று பெயர் இருந்திருக்கவேண்டும்; இதுவும் ஸரஸ்வதியைப் போலவே மணற்பாங்கான பூமியில் மறைந்து விடுகின்றது. ஸரஸ்வதியை இப்பொழுது அந்தர்வாஹிநீ என்று கூறுகின்றனர்.

**ஸிந்துநதி**: —இஃது, விந்திய பர்வதத்தின் தென் சாரலில் வேத்திரவதிக்கும், பார்வதீநதிக்கும் இடையி லுற்பத்தியாய், க்வாலியர் ஸம்ஸ்த்தானத்தைக் கடந்து, குவாரி (Kuwari) என்கிற காட்டாற்றுடன் கூடி, சர் மண்வதிக்குக் (River Chambal) கிழக்கில் யமுனை யில் வீழ்கின்றது. இங்கு கூறப்படும் ஸிந்துநதி யென் பது, இந்தியநாட்டின் வடமேற்கெல்லையிலோடும்

ஸிந்துமஹாநதி (Indus) அல்ல; அந்த மஹாநதி ஸிந்துதேசத்தில் (Sind) இருக்கின்றது; உஜ்ஜயினிக்கு அருகிலிருக்கும் இந்த ஸிந்துநதி வெகு சிறியது. உஜ்ஜயினிக்கும் ஸிந்து தேசத்திற்கும் இடையில் வெகுதூரம் இருப்பதையும் ஆலோசிக்கவேண்டும்.



# பிழை திருத்தம்

| பக்கம். | வரி. | பிழை. | சுத்தம். |
|---|---|---|---|
| 6 | 6 | கணக்கிடுவதற் | கணக்கிடுவதிற் |
| 15 | 16 | நத்க்கு | நதிக்கு |
| 21 | 8 | நாயிகைளின் | நாயிகைகளின் |
| 29 | 6 | சிரத் | சிகரத் |
| 51 | 18 | அழூகையும் | அழுகையும் |
| 60 | 6 | வரன்றோ ? | வரன்றோ? |
| 61 | 13 | இந்திரனுஸ் | இந்திரதனுஸ் |
| 72 | 16 | இலக்ஷ்மண | இலக்ஷ்மண் |
| 74 | 21 | சக்குர் | சக்ரூர் |
| 79 | 12 | சிலுநதிகள் | சிறு நதிகள்.) |
| ,, | 24 | Dessert | Desert |

(நூன்முகத்தில்)

| | | | |
|---|---|---|---|
| XV | 13 | டெ்ள | ஸௌ |
| ,, | 15 | மிகுதியாகய் | மிகுதியாகப் |

sole view of preserving the beauty of the origin thoughts are particularly noteworthy in short, it mu be said that taken as it is from its setting, th language of the original has not lost its brillian effect."

**The Hindu,** May 25, 1911:—"Ayurveda Bhusha Pandit M. Duraiswami Aiyangar, A.K., A.C., h translated into Tamil the well-known Sanskrit pro work, Kadambari, of Sri Bhattabana. Sriman Pandi Krishnamacharya has abridged this great work the present work is but a translation of th aham. The translation has been well done book should enable those who do not know S it to understand and appreciate the eloquence and ability with which the ancient Sanskrit autho told his interesting story. The author has taken grea care to preserve the beauties of the original and th translation has been so well done as to give to th Tamil rendering quite an originality of its own. Th book has been neatly printed."

Price for complete book (I and II parts) 1—12—0

**V. KALYANARAM IYER & CO.,**

***Book-sellers, Esplanade, Madra***